

கல்கத்தாவில் இவ்வருஷம் கூடிய 43-வது காங்கிரஸ் மகாசபை.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 14 | விபவஸு தைமீ கஉ | 1929ஸு ஜனவரிமீ 13உ | பகுதி 7

## கடவுள் வணக்கம்.

ஆணிலே பெண்ணிலே யென்போல வொருபேதை
யகிலத்தின் மிசையுள்ளதோ
ஆடிய கறங்குபோ லோடியுழல் சிந்தையை
யடக்கியொரு கணமேனும்யான்
காணிலேன் திருவருளை யல்லாது மௌனியாய்க்
கண்மூடி யோடு மூச்சைக்
கட்டிக் கலாமதியை முட்டவே மூலவெங்
கனலினை யெழுப்ப நினைவும்
பூணிலே னிற்றைநாட் கற்றதுங் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்யுலக நடையினே நடையினுங் கடையான
புன்மையே னின்ன மின்னம்
வீணிலே யலையாமன் மலையிலக் காகநீர்
வெளிப்படத் தோற்றல்வேண்டும்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (1)

சோதி யேசுட ரேசுக மேதுணை
நீதி யேநிச மேநிறை வேநிலை
ஆதி யேயுனை யானடைந் தேனகம்
வாதி யாதருள் வாயருள் வானையே. (2)

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
யல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. இதனால் தம்மை வீணில் அலையவிடாமல் காட்சிதந்து ஆட்கொள்ள வேண்டுகிறார்.

(இ-ள்.) வேதாந்த சித்தாந்தங்களை ஆராய்ந்து சமரச சன்மார்க்க நிலைமை சித்திக்கப்பெற்றதோடு ஞானவிளக்கமும் பெற்ற சித்தர் கூட்டமே? ஆண் பெண்களுள் என்னைப்போன்ற பேதைமைக் குணமுடைய ஆன்மா இந்த உலகில் உண்டா? (இல்லை. ஏனெனில்) என்மனம் விஷயங்களைப் பற்றிக்கொண்டு அவற்றை விடாமல் காற்றாடியைப்போல் சுழன்றுகொண்டிருக்கிறது. இத்தகைய மனதை அடக்கி ஒரு கணப்பொழுதேனும் நினது திருவருளை நோக்கிலேன். அல்லாமல் மௌனநிலை மேற்கொண்டு கண்களை மூடி இயற்கையாகவுள்ள பிராணவாயுவைத் தடைசெய்து கலைகள் நிரம்பிய சந்திரனைத் தொடுமாறு மூலாக்கினியைக் கிளப்புதற்குரிய எண்ணமும் மேற்கொண்டிலேன். நான் கற்றுக் கேட்டுத் தெளிந்த அறிவைப் பயன் படுத்தாது வீணில் போக்கிவிட்டுப் பொய்யுலகபோகத்தில் மூழ்கி உலகாயதன் ஆகிவிட்டேன். (இனி என்னால் ஒன்றும் செய்ய இயலாது) நாயைவிட இழிந்த அற்பத்தன்மையை யுடையவனாகிய நான் மேன்மேலும் வீண் காரியங்களில் தலையிட்டுத் திரியாதவாறு நீங்கள் மலைபோன்று பகிரங்கமாகத் தோன்றிக் காட்சிகொடுத்தருளவேண்டும் என்க.

பிறவியின் பயன் திருவருட் பேறுபெறுதல். இதற்கு மனதை இந்திரியவழிச் செல்லவிடாமல் தடுத்து இறைவன் திருவடிகளிற் பதியச்செய்ய வேண்டும்; இங்ஙனம் தாம் செய்யவில்லை என்பார் "ஆடிய கறங்கு...... ..................காணிலேன் திருவருளை" என்றார். இது அசாத்தியமாயினும் இதனினும் சிறிது எளிதானதும் அத்திருவருளை அடைதற் கேதுவானதுமாகிய யோகமார்க்கத்தையேனும் கைக்கொண்டிருக்கலாம், அதுவும் செய்யவில்லை என்பார் "அல்லாது மௌனியாய்க்........................ ......நினைவும் பூணிலேன்" என்றார். கற்றல் கேட்டலா லுண்டாகிய அறிவை மறந்து உலபோகத்தில் அழுந்தி வாழ்ந்தேன் என்பார் "இற்றை நாள்...... ..............பொய்யுலக னாயினேன்" என்றார். இதனால் கற்றலும் கேட்டலும் திருவருட் பேறு பெறுதற்கே என்பது பெறப்படும். இது **"கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன், நற்றாள் தொழா ரெனின்"** என்ற பொய்யாமொழியானும் இனிது விளங்கும்.

2. இதனால் மனக்குறும்பகற்றி அருள்வெளியை அளிக்குமாறு வேண்டுகிறார்.

சோதி—ஒளி. சுடர்—ஒளிக்குக் காரணமாகிய விளக்கு. சோதியே... .....................ஆதியே" இவை இறைவனுடைய தன்மையை விளக்கிக் காட்டிய விளிகள். உலகில் உயிர்கட்கு நிகழும் சகல துக்கங்களுக்கும் மனம் நிலைக்களனாயிருத்தலின் "அகம் வாதியாது" என்றார். அருள்வான்—சிதாகாயம். அகவாதனைக்கு **அருள்வானைத்** தவிற வேறு மருந்தின்று என்பார் "அருள்வாய் அருள்வானையே" என்றார்.

3. இதனால் மக்கள் கடமை இன்னது என்று தமது எண்ணத்தில் வைத்து உணர்த்துகின்றார்.




## பத்திரிகை படித்தல்.

நமது நாட்டில் 100 க்கு 50 அல்லது 60 பேராவது தினசரி வாரப்பத்திரிகைகளையோ பிற பத்திரிகைகளையோ படித்துணரும் அறிவாற்றல் பெற்று விட்டார்களானால் சுயராஜ்யம் கிடைத்து விட்டதாகவே தீர்மானித்துவிடலாம். அந்த நிலைமையில் கிடைப்பது தான் உண்மையான ஜனநாயகத்துவ சுயராஜ்யம் ஆகும். படித்தவர்களும் பணக்காரர்களும் சேர்ந்து பாமரமக்களை ஆட்டிவைக்கும் ஆட்சிமுறைக்காலம் மலையேறி விட்டது. தற்கால பிரபஞ்ச ராஜீய தருமமும் அதுவல்ல. மக்கள் கையில் அரசியற்கடிவாளம் இருக்க வேண்டும் என்று கிளர்ச்சியும் போரும் செய்யுங் காலமிது. இந்தியாவிலும் சுதந்தரக்கிளர்ச்சி தோன்றித் தோன்றி அடங்குகின்றது. இந்தக் கிளர்ச்சிகளின் வேகம் தணிந்து தணிந்து வருவதற்குக் காரணம் என்ன? நூற்றுக்குத் தொண்ணூறுபேர் எழுத்து வாசனை அறியாதவர்களாக இருப்பதே காரணமாகும். நிலத்தைப் பண்படுத்தியன்றோ விதை விதைக்க வேண்டும்? பாறைபோன்று இறுகியிருக்கும் நிலத்தில் போட்ட விதை என்னபலனைத் தரும்? அதுபோல் ஜனநாயகத்துவமுறை, இந்த உலகப்போக்கும் கல்வியும் ஒரு சிறிதாவது பரவியிருக்கும் மக்களுக்குத்தான் நற்பலன் தருவதாகும். இல்லையேல் உள்ளதுங் கெட்டுக் குழப்பத்துக்கும் சண்டைககும் காரணமாகிவிடும்.

இது பத்திரிகைக் காலம். பத்திரிகைகளின் உதவியின்றி எந்தக் காரியத்தையும் சாதிக்க முடியாது. இம்மை மறுமை அறிவைப் பெருக்கி மக்கள் வாழ்வைச் செழிப்படையச் செய்வதில் பத்திரிகைகள் இந்தக் காலத்தில் தலைசிறந்து விளங்குகின்றன. முற்காலத்தில் நமது நாட்டில் பிறநாட்டுச் செய்திகளை அறிந்து கொள்ளுதல் சாமானியத்தில் முடியாது. அதுவும் அரசர்களுக்கும் பெரிய தனவந்தர்களுக்கும் தான் சிறிது முடியும். அக்காலத்தில் பிறநாட்டு வர்த்தமானங்களை யாத்ரீகர், சந்நியாசிகள், வர்த்தகர்கள் முதலியவர்கள் மூலம் தெரிந்தால் உண்டு. இவர்களும் சில அற்புதங்களைத் தான் விசேஷமாகக் கூறுவது வழக்கம். பொதுஜன வாழ்க்கைக்கு வேண்டிய பிறநாட்டு எல்லா விஷயங்களையும் இவர்களிடம் எதிர்

பார்ப்பது முடியாது. ஆனால் இந்தக்கால நிலைமை வேறு. அமெரிக்காவில் பேசும் பேச்சு உடனே இங்கே தெரிந்து கொள்ளும் காலமாயிருக்கிறது. எந்தத்தேசத்தில் என்ன விசேஷம் நிகழ்ந்தாலும் இரண்டொரு நாளில் சாதாரணமாகப் பத்திரிகை வாசிப்பவர்களெல்லாம் தெரிந்து கொள்ளலாம். பத்திரிகைகள் எல்லாம் மக்கள் முன்னேற்றங் கருதியே வெளியிடப்படுகின்றன. சொற்பச் செலவில் ஏககாலத்தில் பலதிறப்பட்ட முக்கிய விஷயங்களைத் தெரிவித்து மக்கள் அறிவைப் பெருக்குவதில் பத்திரிகைகளுக்கு நிகராக ஒன்றையும் ஒப்பிட முடியாது. ஒருவன் தானாக பல வருடங்கள் ஆராய்ந்தாலும் ஒரு விஷயத்தின் உண்மை காணல் அரிது. அதே விஷயத்தைப் பற்றிய பலருடைய அபிப்பிராயங்களையும் ஒரேநாளில் பத்திரிகைகள் தாங்கிக் கொடுக்கும். இதனால் ஒருவன் ஆயுள் முழுவதும் ஆராய்ந்தாலும் காணமுடியாத உண்மை ஒருநாளில் தெரிந்து கொள்ளலாம்.

அரசியல், சமூகவியல், வியாபாரம், கைத்தொழில் விவசாயம் முதலியவைகளில் முன்னேற்ற மடைந்திருக்கும் நாடுகளில் நேரில் சஞ்சாரம் செய்து தெரிந்து கொள்ளவேண்டிய விஷயங்களை யெல்லாம் அப்படியே பத்திரிகைகள் நாமிருக்கும் இடந்தேடிக் கொணர்ந்து கொடுக்கின்றன. பல்லாயிரக் கணக்காகச் செலவு செய்தே தெரிந்து கொள்ளக்கூடிய ஜீவாதார உண்மைகள் இரண்டொரு அணாச் செலவில் தெரிந்து கொள்ளலாம். முன்னேற்றம் அடைந்திருக்கிற எந்தத் தேசத்தைப் பார்த்தாலும் அங்கு பத்திரிகைகளின் பெருக்கமும் ஆட்சியும் பிரதானமா யிருத்தல் நன்கு விளங்கும். மேனாடுகளிலும் கீழ்த்திசை ஜப்பானிலும் தோட்டிமுதல் தொண்டமான்வரை அதாவது அரசர், அறிஞர், பிரபுக்கள், சமையல்காரன், வீட்டு வேலைக்காரி, நமது நாட்டில் தாழ்த்தப்பட்டவர்கள் செய்யும் தொழிலைச் செய்வோர், மூட்டை தூக்கும் கூலியாள், ரிக்ஷாவண்டியிழுப்போன், வீதி பெருக்குவோன் முதலிய யாரும் பத்திரிகை வாசித்தலை நித்தியகருமமாகக் கொண்டிருக்கிறார்கள். இதனால் இவர்களுக்குத் தேசநலக்கவலை எவ்வளவு இருக்கிறது என்பது இனிது விளங்கும். பத்திரிகைகளின் அபிவிருத்தியில் கண்ணும் கருத்துமாயிருப்பதனால் அவ்வந்நாட்டார் சீரும் சிறப்பும் புகழும் பெற்றதோடு பிறருடைய நன்மதிப்பும் பெற்று உன்னத பதவியிலிருக்கின்றனர்.

நமது நாட்டில் ஆங்கிலக் கல்வியின் பலனாக அநேக பத்திரிகைகள் தோன்றியிருந்தாலும் நாட்டு நிலைமையையும் ஜனத்தொகையையும் நோக்க இவைகள் செய்யும் வேலை கடலிற் பெருங்காயம் கரைத்ததுபோலவே இருக்கின்றது. நமது நாட்டு மக்கள் இன்னும் பத்திரிகைகளின் மாட்சியை நன்கு உணரவில்லை. இதனால் ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு இருக்கும் ஒரு சிறிது மதிப்பும் நாட்டுமொழிப் பத்திரிகைகளுக்கு இல்லை. ஆதரிப்பாரின்றி அநேக பத்திரிகைகள்

தோன்றித் தோன்றி மறைந்தன. சரியான வழிகாட்டிகளும் போதனையும் இன்மையாலும் அன்னிய ஆதிக்கத்தாலும் நாட்டில் வறுமையும் அறியாமையும் பிணியும் தலைவிரித்தாடுகின்றன.

முற்காலத்தில் மக்கள் அறிவும் ஒழுக்கமும் பெற்றுத் திகழ அநேக சௌகரியங்கள் இருந்தன. ஒவ்வொரு சமூகமும் தக்க போதகர்களைப் பெற்றிருந்தது. அந்த போதகர்களாகிய ஆசாரியர்கள் உலகியல் அறிவையும் ஆன்ம ஞானத்தையும் குறிப்பிட்ட காலங்களில் வந்து மக்களுக்குத் தந்துகொண்டிருந்தனர். இவர்களுக்கு வேண்டிய ஆதரவு அவ்வச் சமூகத்தினர் செய்து வைத்தனர். தென்னிந்தியாவிலும் வட இந்தியாவிலும் ஏராளமான மானிய வருவாய்கள் உள்ள சைவ, வைணவ, அத்வைத, சைன, பௌத்த மடங்கள் அந்த ஞான துரந்தரர்களுக்கு அவ்வம் மதங்களைப் பின்பற்றுவோர்களால் விடப்பட்டவையே யாகும். இப்போது இவர்கள் மக்களுக்கு எவ்வழியில் பயன் படுகின்றனர். அம்மம்ம! சில மடங்களில் நடக்கும் அக்கிரமங்களை என்னென்று எழுதுவது? மடங்களில் தலைமைஸ்தானம் வகிப்போர் மக்கள் அறிவு விளக்கத்துக்காக விடப்பட்ட பொருளை துஷ்பிரயோகம் செய்து வருகின்றனர். தமிழ் நாட்டில் சில விடங்களில் குறிப்பிட்ட சில வகுப்பார்களிடம் "ஆசாரியர்கள்" என்று சிலர் வருஷா வருஷம் வருதல் உண்டு. இவர்கள் உண்மையில் தங்கள் சீடர்களுக்குச் செய்யுங் காரியம் ஒன்றுமில்லை என்பது வெளிப்படை. வீடுகட்ட வேண்டும், குழந்தைக்குக் கலியாணம், கோர்ட்டில் ஒரு வழக்கு அதற்குப் பணம் வேண்டும் என்று ஏழை மக்களை வருத்துகின்றார்களே யொழிய வேறு புண்ணியமோ புருஷார்த்தமோ இவர்களிடம் எதிர்பார்க்க முடியாது. ஆசாரியஸ்தானத்திற்குரிய அந்தஸ்தும் கல்வியறிவும் இவர்கள் பெற்றிருக்கின்றனரல்லர். நாம் அவர்களைப் புண்படுத்த இவற்றைக் கூறவில்லை. அவர்கள் தங்கள் கடமையைச் சரியானபடி செய்யவில்லை என்றே வருந்துகின்றோம்.

இதனால் மக்களுக்கு மததத்துவ உண்மைகளும் நாட்டு மொழிப் பற்றும் இல்லாமல் போய் விட்டன. போகவே நாடு போலி நாகரிக வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்படுகின்றது. நமது நாட்டுப் பண்டைப் பெருமை எல்லாம் கனவு போலாகிவிட்டது. பிற நாட்டினர் எள்ளி நகையாடும் ஈனஸ்திதியில் நாம் இருக்கின்றோம். தற்காலம் பத்திரிகைகள் முற்கால ஆசாரிய ஸ்தானத்தை வகித்திருக்கின்றன என்று கூறலாம். பத்திரிகைகளுக்காக நீங்கள் மானியங்கள் விடவேண்டியதில்லை. மாதம் ஒரு ரூபாவோ இரண்டு ரூபாவுக்குங் குறைவாகவோ கொடுத்தாற் போதும் பிரபஞ்சத்தையே சுருட்டிக்கொண்டு உங்கள் வீடுதேடி அவை வந்து உங்களை மேதாவிகளாகச் செய்யக் காத்திருக்கின்றன.

நமது நாட்டில் பத்திரிகைகள் போதுமானபடி பரவாதிருக்கின்றமைக்குக் கல்விக் குறைவு ஒரு காரணமா யிருந்தாலும் ஆங்கிலங் கற்றவர்கள் நாட்டு மொழிகளிடம் ஒரு சிறிதும் பற்றின்றி அலட்சிய பாவம் காட்டி வருதலே முக்கிய காரணமாகும். இவர்களுக்குத் தாய்மொழி என்றால் வேப்பங்காயாகத் தோன்றுகிறது. தமிழ்மொழியைப் பேசத் தெரியாதிருத்தலே பெரும் கவுரவம் என்று அவர்கள் நினைக்கின்றனர். இந்தமாதிரி கேவல நிலைமை இதர மாகாணங்களில் காணமுடியாது. வங்காளிகளும் ஆந்திரர்களும் தாய்மொழியையும் தாய்மொழிப் பத்திரிகைகளையும் தெய்வமாக வணங்கிப் போற்றுகின்றனர். அவர்கள் அவசியமின்றி அந்நிய மொழியை உபயோகிக்கமாட்டார்கள். தமிழகமோ என்றால் நேர்மாறுபாடாக இருக்கின்றது.

பத்திரிகை படித்தல் நம்மவர்க்கு இன்னும் நூதனமாகவே தோன்றுவதால் அவர்களுக்கு அது அனுவசியமாகத் தெரிகிறது. பத்திரிகை படித்தல் வீண்காலக் கழிவு என்று நினைக்கின்றனர். அவைகள், படிப்பவரை மாட்சியுறச் செய்யும் என்ற உண்மை நம்மனோர் உள்ளங்களில் இன்னும் பதியவில்லை. சிலர் பொய்யும் புளுகும் கொட்டியளப்பதே பத்திரிகைகளின் வேலை என்று நினைத்துக் கொண்டிருக்கின்றனர். இன்னும் சிலர் மூன்றுகால் நான்கு கைகளோடு மனிதன் பிறத்தல், பன்றி வயிற்றில் ஆண் அல்லது பெண் குழந்தை பிறத்தல் போன்ற செய்திகளைத் தெரிவித்தல்தான் பத்திரிகைகளின் தொழில் என்று எண்ணியிருக்கின்றனர். வேறு சிலர் எவனோ காலக்ஷேபம் செய்வதற்குப் பத்திரிகைகளை வெளியிட்டுக் கொண்டிருக்கிறான் நாம் ஏன் பணங் கொடுக்கவேண்டுமென்று முடிவு செய்திருக்கின்றனர். அரசாங்கத்தையே ஆட்டி வைப்பதோடு நமது நாட்டுக்கலைகள், கைத்தொழில், வியாபாரம் விவசாயம் முதலியவற்றையும் வளர்க்கும் ஜீவாதார விஷய பொக்கிஷம் **பத்திரிகைகள்** என்று அவர்களுக்குப் போதிப்பாரில்லை.

நேயர்களே! இந்த நிலைமையில் நாட்டை எத்தனை நாளைக்கு விட்டுவைப்பது? தேசத்தில் ஐக்கியம் என்பது ஒரு சிறிதும் இல்லை. வருஷா வருஷம் கோடிக்கணக்கான பொருள்கள் கொள்ளை போகின்றன. மக்கள் உண்டிக்கும் உடைக்கும் ஏங்கி நிற்கின்றனர். இங்கே பிழைக்க வழியின்மையால் ஆண்டு தோறும் பல்லாயிரக் கணக்கான மக்கள் வேற்று நாடுகட்குச் சென்று வேதனை உறுகின்றனர். இந்த ஆபத்துக்களைப் போக்கும் மருந்து என்ன? மக்களின் அறியாமையைப் போக்கி கல்வி யறிவோடு தற்கால உலகியல் உணர்ச்சி பெறச் செய்தலேயாகும். அடிமை புணர்வு தொலைய வேண்டும். தன் மதிப்பும் தன்னம்பிக்கையும் ஓங்கி வளரவேண்டும். எல்லாரும் ஒன்று எனும் உத்தம மனோபாவம் வீறுகொண்டு விளங்கவேண்டும். அப்போதுதான் நாடு நாடாகும். நாமும் மக்கள்

எனப் பிறரால் மதிக்கப் பெறுவோம். இந்தப் புண்ணிய கைங்கரியங்களைச் செய்யவல்லன பத்திரிகைகளே. சாதாரண ஜனங்களுக்குப் பத்திரிகை படிக்கும் உணர்ச்சியைக் கிளப்ப வேண்டிய பொறுப்பு நமது நாட்டுக் கற்றோர்களைச் சார்ந்திருக்கிறது.

சமூக சீர்திருத்தக்காரர்கள் முக்கியமாக இப்பணியை மேற்கொள்ளவேண்டும். இவர்கள் சமூகத்துக்கு என்ன என்ன செய்ய வேண்டுமென்று நினைக்கிறார்களோ அவைகளை நிறைவேற்றுவதற்கு வெறும்பேச்சளவிலும் எழுத்தளவிலும் தீர்மானங்களைச் செய்து விடுவதில் பலனில்லை. சீர்திருத்தப் பேச்சைச் செவியிற் போட்டுக் கொள்ளவாவது ஜனங்களுக்கு அறிவு வேண்டாமா? இந்த அறிவு மக்களிடை இல்லாமையால் எத்தனை கூட்டங்கள் போட்டு எவ்வளவு தீர்மானங்களைச் செய்தபோதிலும் அவையெல்லாம் செவிடன் காதில் சங்கு ஊதினதுபோல் வியர்த்தமாகின்றன. எனவே பத்திரிகை படிக்கும் ஆசையை முதலில் கட்டாயமாக ஜனங்களுக்கு உண்டாக்கவேண்டும். ஈண்டு ஜனங்கள் என்றது பெரும்பாலும் கிராம ஜனங்களையே குறிக்கும். சமூக முன்னேற்றம் தேச முன்னேற்றம் என்பன எல்லாம் அவர்களைப் பற்றியே நிற்கின்றன.

ஒவ்வொரு கிராமத்திலும் தவறாமல் ஒவ்வொரு சங்கம் இருக்க வேண்டும். அச்சங்கம் அந்த கிராமத்துக்குப் பிரதிநிதித்துவம் வாய்ந்ததாயிருக்கவும் வேண்டும். அதில் இலவச வாசகசாலை நல்லவிதமாக அமைக்கப்படவேண்டும்; முக்கியமான எல்லாப் பத்திரிகைகளையும் வரவழைக்க வேண்டும். இக்காலத்தில் இத்தகைய ஏற்பாடுதான் சிறந்தது. நமது கிராம ஜனங்கள் முற்காலத்தில் நல்ல கிராமத் தலைவர்களின் கீழ் கட்டுப்பாடாக வாழ்க்கை நடத்தி வந்தனர். அவர்கள் அடிக்கடி கூட்டங்கூடி கிராம நலத்தை நாடி வந்தனர். இப்போதும் கிராமப் பொதுவிஷயங்களைக் கூட்டங்கூடி ஆலோசிக்கும் வழக்கம் அநுஷ்டானத்திலிருந்து வருகிறது. இதை முறையாக ஒழுங்கு படுத்தப்படும் ஸ்தாபனத்தையே யாம் சங்கம் என்று குறிப்பிடுகிறோம். இந்தச் சங்கத்தின் மூலம் பல அரிய காரியங்களைச் சாதிக்கலாம். பஞ்சாயத்துக் கோர்ட்டு, கூட்டுறவு சங்கம், ஆரம்பபாடசாலை ஆகிய இவைகளை வெற்றியுற நடத்த இச்சங்கங்கள் பெரிதும் துணை புரியும். மேனாடுகளில் எல்லாக்காரியங்களும் சங்கங்களின் மூலமாகவே நடைபெறுகின்றன. ஆகையால் சமூக ஊழியர்கள் இத்தகைய சங்கங்களை ஏற்படுத்தப் பிரசாரம் செய்தால் மேற்கண்ட நலன்களோடு பத்திரிகை படிக்கும் உணர்ச்சியும் சாதாரண மக்களுக்கு உண்டாகும். தேசவிடுதலையையும் சில வருடங்களில் எதிர்பார்க்கலாம். திருவருள் நமது எண்ணத்தைச் சித்திபெறச் செய்வதாக.

ஓம் தத் ஸத்.

---

# நீ ஒரு தமிழனா?

(ஆரியூர். வ-பதுமநாப பிள்ளை)

புனிதத்தன்மையிலும் தொன்மையிலும் பிற நன்மையிலும் ஒப்புயர்வற்று ஒளிரும் செந்தமிழ் நாட்டிலே - அன்புகனிந்து அருள் நிறைந்து உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் அமிழ்தினு மினிய அரும்பாக்களை அகங்கசிந்துருகிப் பாடிச்சென்ற அருளனுபூதிச் செல்வர்கள் பலர் விளங்கிய பைந்தமிழ் நாட்டிலே - அன்பு வடிவினனாய ஆண்டவன் சங்கப்புலவர்கள் வாயிலாகத் தண்டமிழ் வளர்ப்பித்த நற்றமிழ் நாட்டிலே பிறக்கும் பேறு பெற்றோருள் நீ ஒருவனா? நீ ஒரு தமிழனா? உன் மூதாதைகள் வீரரிற் சிறந்த வீரராய்-அறிஞரிற் சிறந்த அறிஞராய்-கவிஞரிற் சிறந்த கவிஞராய்-கலைஞரிற் சிறந்த கலைஞராய் தமிழ்நாட்டிற்கே ஒரு தனிப்பெரும்புகழைத்தந்து வாழ்ந்துவந்தனரென்பது உண்மையே; ஆனால், அப்பழம் புகழையே பன்னிப் பன்னிப்பேசி, அன்னோர் வழித்தோன்றியவனென உன்னைப் புகழ்ந்துகொண்டிருப்பதால் மட்டும் என்ன பயன்? அவ்வளவோடு நின்றுவிடுவதால், பயனேதுமில்லாது போய்விடுவதோடு உனது பழம்புகழ்ப்பாட்டைப் பிறர் நம்புவதற்குமில்லாது போய்விடும். ஆகலின், உன் கடமை என்ன?

கேட்போர் கைகொட்டிப் புகழ்ந்து பேசுமாறு மேடைகளிலேறிச் சொற்பொழிவுகள் செய்வதேனும்-அறிஞர் வியந்து புகழுமாறு திறம்படக் கட்டுரைகள் வரைவதேனும் தற்போதைய தமிழகத்திற்கு வேண்டப்படுவனவல்ல. நிகழ்காலத் தமிழ்நாட்டில், இரத்தம் சிந்தும் கொலைப்போர்க்கு ஆட்கள் வேண்டப்படுகின்றார்களில்லை; மேடைகள் தோறும் ஏறி வாசாஞானம் பேசியும் வம்பளந்தும் ஒருவரை யொருவர் பழித்துக்கொண்டும் கிளர்ச்சி பெருக்கும் ஆட்கள் வேண்டப்படுகின்றார்களில்லை. எவர் புகழ்ந்தாலும் எவர் இகழ்ந்தாலும் அவற்றைப் பொருட்படுத்தாது, எத்தகைய பிரதிபலனையும் எதிர்பாராது, தமிழன்னையின் நலன் ஒன்றையே குறிக்கொண்டு, தன்னலங் கருதாது அன்புவழிபற்றி அறநெறி நின்று சீரியதொண்டாற்றும் வீரரே, தற்காலத் தமிழ்நாட்டிற்கு வேண்டற்பாலர். அத்தகைய நிட்காமியப் பணி செய்து கிடக்க உன்னைத் தகுதியுடையவனாக ஆக்கிக்கொள். உன்னால்-நீ மனம்மட்டும்கொண்டால் அஃது நிச்சயமாக முடியும். "அத்தகைய அரிய நோக்கத்தை மேற்கொள்ள நம்மால் முடியுமோ" என்று ஐயுற்றுப் பின்னிடாதே. அஃது கோழைமை; அவ்வாறு பின்னடைவதால் நீ பிறந்த தமிழ்நாட்டின் தொல்பெரும் புகழையே-நீ போற்றும் உனது மூதாதைகளின் நற்பெயரையே சற்றுக் கறைப்படுத்துவோன் ஆவாய்! ஆதலின், ஏ! தமிழனே! எழுந்திரு! விழித்திடு! உன்னைச் சுற்றிலும் உற்றுநோக்கு! உனது அயலார் எத்துணை விரைவில் முன்னேறிச் சென்றுகொண்டிருக்கின்றனர் என்பதைக் கவனி! உன்னால் செய்யக்கூடியது எத்துணைச் சிறிய பணியாயினும், அஞ்சா நெஞ்சோடும் ஆண்டகைமையொடும் அப்பணியை மேற்கொள்ளச் சற்றும்

தயங்காதே! நீ ஒரு தமிழன் என்பதை உனது உள்ளத்தில் நன்கு பதிய வைத்துக்கொள்! அவ்வகையில் நீ கர்வத்தோடு நிமிர்ந்து நில்!

"நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்று பலர் கூற
மண்டமர்க் குடைந்தனனாயி னுண்டவென்
முலையறுத்திடுவன் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே"—எனக்

காக்கைபாடினியார் கூறியவாறு, தன்மகன் அமர்க்களத்தில் புறமுதுகிட்டோடியதாக பலர் நவிலக்கேட்ட நரைமயிர்த்தலைக் கிழவியொருத்தி, அஃது உண்மையாயின் அவனுக்குப் பாலூட்டிய தனங்களை அறுத்தெறிவேன்"—என்று சூளுரைகூறி வாளொடு போர்க்களம்போந்து தேடியவிடத்து, எதிரிகளது அம்புக்கு இலக்காகி இறந்துகிடந்த தன் மகனைக்கண்டு, அவனைப் பெற்றநாளினும் பெருமகிழ்ச்சி உற்றாளாம். ஒரு கிழவியின் உள்ளம் அத்துணை வீரம்பொருந்தி விளங்குமாயின், கட்டிளமைவாய்ந்த காளைகட்கு எத்தகைய வீரஉணர்ச்சி இருத்தல்வேண்டும்! "நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்"—என்று நாவரசர் வீரமுழக்கம் செய்தநாடு உனது நாடு. "அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்சவருவது மில்லை" என்று தமிழ்ப்பெருந்தகை வீறுகூறிய நாடு உனது நாடு. "உன்னைச் சிந்தைசெய்து செய்து உன் நெடுமாபுகழ் பாடியாடியென்—முன்னைத் தீவினைகள் முழுவேர் அரிந்தனன் யான்—உன்னைச் சிந்தையினு லிகழ்ந்த இரணியனகல் மார்வங் கீண்டஎன்முன்னைக் கோளரியே! முடியாத தென்னெனக்கே?"—என்று நாவீறுடைய பிரானும் சடகோபர் ஞானகர்வத்தொடு வீறுகூறிய நாடு உனது நாடு. "அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா—எஞ்சாமை—எண்ணியிடத்தாற் செயின்" என்பது பொய்யிற்புலவர் பொன்மொழி. இறைவனது குழந்தை என்ற முறையில்—உனக்கு ஆன்மசக்தியில் உறுதியான பற்றும், ஆண்டவனது திருவருளில் குன்றாத நம்பிக்கையும் இருக்கும்வரை-நீ ஏன் பிறருக்கு அஞ்சுதல் வேண்டும்? சுவாமி விவேகானந்தர், அயோத்தியில் நடந்துசென்றுகொண்டிருந்தபோது, ஒரு குரங்குக்கூட்டம் அவரைத் துரத்தத்தொடங்கியதாம். அதுகண்டு பயந்து ஓட ஆரம்பிக்கவே, அவை வேகமாகச் சுவாமிகளைத் துரத்தினவாம். திடீரென சுவாமிகள் நின்று, அவற்றை எதிர்க்கச் சித்தமாக இருந்தமைகண்டு, அவை திரும்பியோடிவிட்டனவாம். அச்சமுள்ளவரை துன்பங்களும் தொடர்ந்துகொண்டேயிருக்கும்! அஃது ஒழிந்தாலோ, அத்துன்பங்கள் நம்மை எதொன்றும் செய்யா.

எனது தமிழ்ச் சகோதர! நான் பார்ப்பனன். அவன் பார்ப்பனனல்லாதான், நான் குடியானவன், அவன் தீண்டாதவன் என்று வகுப்புப்பூசல் விளைத்துக்கொண்டிராதே. "நால்வருண மாசிரமம் ஆசாரம் முதலா நவின்ற கலைச் சரிதமெல்லாம் பிள்ளை விளையாட்டே"—என்று சாதிப்பிளவுகளை எள்ளிநகையாடுகிறார் திருவருட்பிரகாச வள்ளலார். பார்ப்பனன் என்பதற்

காகவாவது ஏனையோருள் உயர்ந்தவன் என்பதற்காகவாவது பெருமை பாராட்டிக்கொள்ளாதே. 'சாதி' எனும் சொல்லே தமிழ்ச்சொல்லன்று; ஆதலின் தமிழனாகிய உனக்குச் சாதிவாதப்போர் சற்றும் தகாது. நீ எவ்வருணத்தைச் சேர்ந்தவனாயினும், உனது சாதி 'இந்தியசாதி' யாகக்கொள். நீ எக்குலத்தவனாயினும் 'நான் தமிழன்' என்று பெருமையோடு கூறிக்கொள். பின்வரும் விவேகானந்த சுவாமிகளது பொன்மொழிகளைக் கவனி:—"தாழ்ந்த வகுப்பினர், அறிவீனர்கள், எளியவர்கள், எழுதப்படிக்கத் தெரியாதவர்கள், சக்கிலியன், தோட்டி இவர்கள் உனது சதையும் இரத்தமுமே என்பதை— உனது சகோதரர்களே என்பதை மறந்துவிடாதே. ஏ! தீரா! தைரியமாயிரு! துணிந்துகொள்! நீ ஒரு இந்தியனாயிருப்பதுபற்றி கர்வமடை;—"நான் ஒரு இந்தியன்; ஒவ்வொரு இந்தியனும் என்னுடைய சகோதரன்"—என்று கர்வத்துடனே பறையறை. "அறிவீனனாய இந்தியன், உதவியற்ற இந்தியன், பிராஹ்மண இந்தியன், பறைய இந்தியன் எனது சகோதரனே—" என்று சொல்.

ஏ! தமிழனே! 'சீர்திருத்தம்' 'சீர்திருத்தம்'—என்று பறை சாற்றிக்கொண்டு, 'பழமையனைத்தும் பயனற்றவையே யாதலின், அவை முற்றும் அழிக்கப்படவேண்டும்' என்று, ஆக்கமுறை விடுத்து அழிவுமுறைபற்றி பிரசாரம் செய்வது பெரும்பேதைமையே. "தொன்மையவா மெனு மெவையும் நன்றாகா; இன்று—தோன்றியவா மெனுமெவையுந் தீதாகா" என்று தமிழ்ப் பெரியோர் அறிவுறுத்திப் போந்தனர். ஒப்புயர்வற்ற ஆன்மஞானம் படைத்த ஆன்றோரால் அக்காலநிலைக்கேற்ப வகுக்கப்பட்ட அறநெறிகளின்மீது, காலசக்கரத்தின் கொடுமையால் பல மாசுகள் படித்திருக்கலாம்; அவ்வாறு படிதல் இயல்பே; அத்தூசுகளைத் துடைத்து, அவற்றை காலநிலைக்கேற்றவாறு சீர்திருத்தி மேற்கொள்வது அறிஞர்க்கு அழகேயன்றி, உமியோடு அரிசியையும் போக்க முனைந்து நிற்பது அழகன்று; அஃது பைத்தியக்காரத்தனமேயாம். "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே!—பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே!"—என்று மணிவாசகப் பெருந்தகையார் இறைவனை இறைஞ்சுகின்றார். தற்போது எழுப்பப்படும் தேசீய இல்லம், பழைமையாகிய அடிப்படையின்மேலேயே—சநாதன தர்மத்தின் மீதே எழுப்பப்பட்டாலன்றி, நிலைத்து நிற்பது அரிது. ஆகவே, நீ செய்யும் தொண்டின் பயனனது பழமையும் புதுமையும் கலந்து மிளிர்ந்திடுவதாக.

தமிழ்ச்சகோதரனே! பிறரைச் சீர்திருத்த முன்வருதன் முன்னம், உன்னை நீ நன்கு திருத்திக்கொள். அவ்வாறின்றி, 'சொல்வதொன்றும் செய்வதொன்று' மாகக்கொண்டு, உன்னிடம் குற்றங்கள் பலவற்றை வைத்துக்கொண்டு, பிறரைக் குறைகூறவோ சீர்திருத்தவோ முன்வருவாயாயின், நீ அறிஞரால் நகையாடப்படுவாய். "ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்—தீதுண்டோ மன்னுமுயிர்க்கு"—என்னும் செந்நாப்போதார் செம்மொழியைச் சிந்தையிலிருத்தி, நாட்டைச் சீர்திருத்த விரும்பும் நீ முதலில் உன்னைச் சீர்த்திக்கொள்வது பெரிதும் நலந்தருவதாகும். உனக்குள்ளேயே ஒளிந்துகிடக்கும் குற்றங்களை—உனக்குள்ளேயே இருந்து, உனது அறிவைக் குறைத்து அன்பை மறைத்து பல்லாற்றானும் உன்னை அல்லற்படுத்தும் அழுக்காறு, அவா, சீற்றம் முதலிய உட்பகைகளை-ஒடுக்கி நீ வெற்றிகொள்ளாதவரை, உன்னை நீ 'வீரன்' என அழைத்துக்கொள்ள எங்ஙனம் உரிமையுடையவனாவாய்? "உட்பகையஞ்சித் தற்காக்க; உலைவிடத்து—மட்பகையின்

மாணத் தெறும்''—என்ற நாயனார் நன்மொழியை நன்குணர்ந்து முதலில் உனது உட்பகைகளோடு பொருது வெற்றிகொள்; அதன்பின்னர், நீ வெளிப் பகைவர்களை வெல்ல முயலலாம்.

மற்றும், ஒருவரையொருவர் குறைகூறிக்கொண்டும் பழித்துக்கொண்டு மிருப்பதால் வீண்கலகமும் அழுக்காறும் வளர்ந்து பெருகுமேயன்றி, குறை கூறுவோராதல் குறைகூறப்படுவோராதல் திருந்துதற்கு இடமில்லை. வன் சொற்களும் வசைமொழிகளும் துவேஷத்தை வளர்ப்பனவேயன்றி, எதிர் பார்க்கப்படும் பயனை ஈயவல்லனவாகா. அன்பினாலும் இன்சொற்களாலுமே இருசாராரும் திருந்துவர். இதுபற்றியே, "இனிய உளவாக இன்னாத கூறல்-கனியிருப்பக் காய் கவர்ந்தற்று"—"உள்ளியவெல்லாம் உடனெய்தும், உள் ளத்தால்—உள்ளான் வெகுளியெனின்"—என வரூஉம் செம்மொழிகள் எழுந்தன.

தமிழ்த்தாயின் முன்னேற்றத்தின் பொருட்டு நீ மேற்கொள்ளும் பணிக்கு பலதிறப்பட்ட இடையூறுகள் நேரக்கூடும். பெரும்பாலும், நற்செயல்க ளனைத்தும் தடைகள் பலவற்றைக் கடந்தபின்னரே நிறைவேறுகின்றன. உன்முன் எதிர்ப்படும் தடையைக்கண்டு அஞ்சி, நீ சற்றேனும் தளர்வடைதல் கூடாது. 'முயலுக மேன்மேல்.' "கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது-தூக்கங் கடிந்து செய''லே கர்மவீரர்கள் இயல்பு. "இன்னல் வந்துற்றிடும் போததற் கஞ்சோம்—ஏழையராகியினி மண்ணிற்றுஞ்சோம்—தன்னலம் பேணி இழிதொழில் புரியோம்—தாய்த்திருநாடெனில் இனிக் கையை விரி யோம்''—என்று வீரமுழக்கம்செய்து போந்தார் நமது தமிழ்நாட்டு இரவீந் திரராய கவீந்திரர். அத்தகைய அஞ்சா உறுதி-வீர உணர்ச்சி ஒவ்வொரு தமிழ னுக்கும் உண்டாகுமாறு அன்னை பராசக்தி அருள்பொழிவாளாக. தமிழனே! நீ தன்னம்பிக்கை உடையவனாயிருத்தல் அவசியம். அன்பாலும் இன்சொற்க ளாலுமே பிறரைத் திருத்தமுயல். எப்பயனையும் எதிர்பாராது,—எதிர்ப்படும் இடையூறுகளைப் பொருட்படுத்தாது - தமிழ்த்தாயின் முன்னேற்றத்திற்கான 'பணிசெய்துகிடக்க' காப்புக்கட்டிக்கொள். "ஜயமுண்டு பயமில்லை மனமே!" என்று அஞ்சாது அறைகூவு.

ஆன்மஞானப் பயிற்சிக்கும் இயற்கையின்ப நுகர்ச்சிக்கும் மிகப்பெரி தும் துணைசெய்யும் ஞானநூல்களும் காவியங்களும் தமிழ்த்தாய் பற்பல பெற்றிருக்கின்றாள். ஆனால், "புத்தம் புதிய கலைகள்-பஞ்சபூதச்செயல்களின் நுட்பங்கள் கூறும்-மெத்த வளருது மேற்கே-அந்த மேன்மைக்கலைகள் தமிழ் மொழிக்கில்லை''—என்று இக்கால அறிஞர் குறை கூறுகின்றனர். ஆங்கிலத் திலும், தமிழிலும் போதிய மொழியறிவுடையோர், அக்குறைபாட்டைக் களைய முன்வந்து, பழமையும், புதுமையுங் கலந்த சீரிய அணிகளை செந்தமி ழன்னைக்கு அளித்தல் வேண்டும். பகைவரிடத்தும் சினம் கொள்ளாது, அனைவரிடத்தும் அன்பேகொண்டு, இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் பொருட் படுத்தாது, பயன் கருதாது பணிசெய்து கிடக்கும் வீரத்தமிழர்களாக தமி ழகத்தினர் விளங்குதல் வேண்டும். தமிழ்நாட்டின் எல்லைக்குட்பட்ட இடத் தில் வாழும் ஒவ்வொருவரும், எவ்வகைய சாதிப்பிணக்குங் கொள்ளாது, 'தமிழர்' என்ற ஒரே நோக்கங்கொண்டு சேர்ந்து உழைத்தல் வேண்டும். தமிழ் இளைஞர்காள்! நும் உழைப்பால் பண்டைய வீரத் தமிழ்நாடு புத்துயிர் பெற்றெழுவதாக. வந்தே மாதரம்!

# ஹேண்டல் என்னும் ஐரோப்பிய இசை அரசன்

(E. V. சிங்காரவேலு முதலியார். பி. ஏ.

(241-ம் பக்கத் தொடர்ச்சி)

வீணை வாசிப்போராக அமர்ந்த ஹேண்டல் தமது சாமர்த்தியத்தாலும் விடா முயற்சியாலும் வெகு சீக்கிரத்தில் வாத்திய சாலையை (Orchestra) நடத்திவைக்கும் தலைவர் பதவி பெற்றார். அப்பதவி பெற்றமையால் சுயமாக நாடகங்களை இயற்றும் ஆற்றலையும் பெற்றார். இயற்கையாக அமைந்துள்ள இசையோடு நாடகவியலைச் சேர்த்தார். 1705 வருஷம் முதன் முதலாக ஒரு இசை நாடகத்தை (Opera) எழுதி முடித்தார். அக்காலத்து அதுமிகுந்த கீர்த்தி யடையச் செய்தது. பின்னர் இரண்டாவதாக ஒரு இசை நாடகம் வரைந்தார். அதனையும் எல்லோரும் பெரிதும் மதித்தனர். (அது இப்போது காணப் படவில்லை.) ஹேண்டலுக்கு வருமானம் அதிகரித் திருந்தமையால் பிரஷிய அரசன் குறிப்பிட்ட இசைப் பயிற்சிக்காகத் தமது சொந்தச் செலவில் இட்டாலிக்குச் சென்று இரண்டு வருடங்கள் தங்கியிருந்து பூரணபாண்டித்தியம் பெற்றுத் திரும்பினார்.

டஸ்கன் இளவரசர் ஹேண்டலின் கவிவன்மையைக் கேட்டு அவரைப் பிளாரென்சிலுள்ள தமதரண்மனைக்கு வருமாறு வேண்டினர். அவ்வாறே சென்று அவருடன் சின்னாள் இனிது இருந்தார். அந்நகரத்து சிரேட்ட குருவான கார்டினல் தேவ ஆலயத்திற்கு இசைப்பாட்டுப் பாடித் தருமாறு கேட்டனர். இட்டாலி தேசத்து பெரிய கிரந்தகர்த்தாக்களுள் பலர் அவருடைய நட்பைப் பெற ஆவலுடன் எதிர் பார்த்திருந்தனர். அவரது புதிய இசை நாடகங்களைக் கண்டு களித்து எல்லோரும் அவரைப் "பிரியமுள்ள ஹேண்டல்" என்றழைக்கத் தொடங்கினர். எங்கும் அவருடைய புகழ் பரவிற்று. வரவேற்புகளும், உபசாரங்களும் விமரிசையாக அவருக்குச் சென்றவிடமெல்லாம் கொடுக்கப்பட்டன.

ஹனவர் என்னும் அரசன் அவருடைய சாமர்த்தியத்தைப் பாராட்டி விசேஷ வெகுமதிகள் கொடுத்துத் தன் சமஸ்தானத்தில் வைத்துக் கொண்டான். 1710ஞு இந்த அரசன் தன்காரியஸ்தராக ஹேண்டலை இங்கிலாந்திற்கனுப்பினர். பல பெரியோர்களின் வேண்டுகோளின் மேல் அங்கு ஹேமார்க் கட்டிலிருக்கும் இராணியின் நாடக சபாவிற்குப் பல நாடகங்களை இயற்றித் தந்தனர். அவை எல்லோராலும் பெரிதும் மதிக்கப்பட்டன. ஆனால் அக்காலத்தில் பெயர் பெற்ற அடிசன் என்னும் ஆங்கில வியாசகர்த்தா இவருடைய பேரையும் புகழையும் பார்த்து அதிகப் பொறாமை கொண்டு இவரைப் பற்றிக் கேவலமாக வரையத் தொடங்கினர். இது ஹேண்டலுக்கு முதலில் கொஞ்சம் விசனத்தையும் மனச்சோர்வையும் கொடுத்தது.

ஹேண்டல் 'ரினல்டோ' (Rinaldo) என்றொரு நாடகத்தை எழுதி முடித்தார். அதை எல்லோரும் அதிக விருப்பத்தோடும் மகிழ்வோடும் வரவேற்றனர். அதனைக்கண்டு ஆனந்திக்காதவர் இல்லை என்றே கூறலாம். லண்டனில் அந்நாடகம் பன்முறை நடத்தப்பட்டும் அதனைத் திரும்பவும் நடத்துமாறு ஜனங்கள் வேண்டிக் கொண்டார்கள். அந்நகரில் ஹேண்டலின் பெயரை அறியாதாரில்லை. அவர் லண்டன் நகரிலேயே வாழ்க்கை நடத்த எண்ணினர். அப்போது இவரது திறமையைக்கண்டு வியந்த இங்கிலாந்து

மன்னன் இவரைச் சமஸ்தான கவண்ட் கார்டன் நாடக சபைக்குத் தலைவ ராக்கினார்.

அந்தக் காலத்தில் இடாலிதேசத்து பானன்சினி (Bononcini) என் னும் பெயர் பெற்ற ஓர் இசை வீரர் இங்கிலாந்தி லிருந்தார். ஹேண்டலுக் கும் அவருக்கும் போட்டி ஏற்பட்டது. நகரம் இரண்டுபட்டது. சிலர் பானன் சினியையும் சிலர் ஹேண்டலையும் ஆதரித்தனர். ஹேண்டலின் கீர்த்தி சிறிது மழுங்கியதாகக் காணப்பட்டது. அவர் இங்கிலாந்தை விட்டுச் சென்று விடலாமென்றும் நினைத்தார். அவ்வாறு செய்திருப்பின் அவருடைய பேரும் புகழும் அழிந்திருக்கும். அச்சமயத்தில் அவருடைய சீடர்களி லொருவர் இட்டாலிக்குச் சென்று குரலினிமையில் உலகில் யாவரையும் விஞ்சிய சீமாட்டி ஒருத்தியை மணந்து இங்கிலாந்திற்கே கூட்டிகொண்டு வந்தனர். அவரது வேண்டுகோளுக்கு இணங்கி அச்சீமாட்டி தனது குயிலினுமினிய குரலில் அவருடைய கீதங்களை அரங்கில் பாடினாள். இதனைக் கேட்ட அனை வரும் ஆனந்தசாகரத்தில் மூழ்கினர். அச்சீமாட்டியையும் கவியையும் போற் றாதவரில்லை. ஹேண்டலின் எதிராளி பானன்சினியின் பிரதாபம் ஒடுங் கிற்று. நமது இசை அரசன் இங்கிலாந்தில்-என் ஐரோப்பாவிலேயே தனக்கு ஒப்புவமையற்றுச் சிறந்து விளங்கினார்.

## ஹேண்டலின் துன்பங்களும் மீட்சியும்.

பொதுவாக இசைநாடக உற்சாகம் ஜனங்களுக்குக் குறைந்து வந்தது. இசை நிபுணர் புதிதாக பலரைச் சேர்த்துக்கொண்டு தாமே ஒரு நாடக சபா ஒன்றை ஆரம்பித்து அப்போது நடத்த முயன்றார். அதில் அதிக நஷ்டத்தை அடைந்தார். இதனால் பெரும் கடனாளியுமானார். அது மனச் சஞ்சலத்தைக் கொடுத்தது. துன்பத்தின்மேல் துன்பம் ஏற்பட்டது. அவருடைய தேகஸ் திதி சீர்கேடடைந்தது. அப்போது அவருக்கு ஒருவகையான இழுப்பு ஜன்னி கண்டது. அந்நோய் அவரை மூடமாக்கி, மூளையைக் கரைத்து அதிக துன் பத்தைக் கொடுத்தது. அவர் உதவியற்ற, செயலற்ற பிரேதம்போல் கிடந் தார். அப்போது அவருடைய வயது 52. தமது வாழ்நாளில் சேகரித்த பத் தாயிரம் பவுன்களை இழந்து கடன்காரரின் கொடுமைகளுக்கும் ஆளானார்.

அனைவரும் அத்துடன் அவருடைய பெயரும், பெருமையும் அழிந்தன வெனக் கருதினர். ஆனால் உண்மையில் அவருடைய ஜீவியத்தின் முக்கிய மான வேலையைச் செய்ய அப்போதுதான் ஆரம்பித்தார். அபஜெயத்திலும், தேக அசௌக்யத்திலும், புத்திபேதிப்பிலும் வருந்திக் கொண்டிருந்த அச் சமயத்தில்தான் அவருடைய முழுக் கவிவன்மையும் வெளிப்பட்டது. இட் டாலியில் கற்றுக்கொண்டுவந்த இன்னிசை நாடகப் பாக்களைவிட்டுப் புதி தான—உள்ளத்தைக் கவரும்—உருக்கமான பக்தி ரசம் ததும்பிய பஜனை கானங்களைப் பாடி ஆங்கிலேயருடைய ஆழ்ந்த அன்பைக் கொள்ளை கொண் டார். அப்போது ஆங்கிலேய சீமான்கள், சீமாட்டிகள், சிறியர், பெரியோர் யாவரும் சிற்றின்பரசம் செறிந்த இசைப்பாட்டுகளை விட்டு தத்துவ ஞானத் தையும் பேரானந்தத்தையும், உள்ளக் கவர்ச்சியையும் கொடுக்கும் வேதஆலய பஜனைப் பாக்களைக் கேட்டு மகிழ்ந்தனர். அவரது வேதாந்தகருத்துகள் தங் கிய கீர்த்தனைகள் எங்கும் பரவின. இத்துறையில்தான் அவர் என்றும் அழி யாது தம்பெயரை நிலைநாட்டினார்.

பக்திரசப் பாக்களைத் தீவிரமாய் அவர் எழுதத் துணிந்ததற்கு அயர்லந்து மாந்தரே காரணமெனக் கூறலாம். டிவான்ஷயர் பிரபு அவரை அயர்லந்தி லுள்ள தன் கோட்டைக்கு அழைத்துச் சென்றார். அங்கே "தேவதூதன்" (Messiah) என்னும் பக்திரசம் ததும்பிய பாடலை எழுதிமுடித்தனர். அதைப் பாடக்கேட்ட அயிரிஷ் மாந்தர் பரவசமடைந்தனர். ஹேண்டலின் இசையி லீடுபட்ட அவர்கள் அவரது ஒவ்வொரு பாட்டுக் கச்சேரிக்கும் 400 பவுனுக் குக் குறையாமல் கொடுத்து வந்தார்கள். இவ்வாறு ஹேண்டலுக்குத் திரண்ட பொருள் சேர்ந்தது. அவர் மிகவும் தயாள சிந்தையுடையவர். தமக்குக் கிடைத்ததைத் தாமே டாம்பீகமாகச் செலவழியாமலும், செல்லுக்கிரை யாகச் சேர்த்து வையாமலும் அங்கு கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த ஜெயில் கைதிகள் உபயோகத்திற்கும், நல்ல ஆஸ்பத்திரிகளுக்கும் பொருள் கொடுத் துதவினர். தவிர இலண்டன்மாநகரில் 'மெசையா வைத்தியசாலை' ஒன்றை ஸ்தாபித்து அதற்காக ஏராளமான பொருளைச் செலவு செய்தார்.

ஹேண்டலினிடம் கொஞ்சம் முன்கோபம் உண்டு. ஆனால் அவருடைய அருளுடைமை அதை மறைத்தது. ஹாஸ்ய ரசிகர். கவிவன்மையில் அவர் சிறந் தவரல்லர் எனினும் ஐரோப்பாவில் கீர்த்தனைகள் எழுதுவதில் அவருக்கு விஞ்சியவர் இருப்பதாகக் கூறமுடியாது. அவரது குணமாண்பு அவருடைய பாடல்களுக்குப் பிரகாசத்தையும், இன்பத்தையும் கொடுத்தது. இணையற்று உலவிவரும் அவருடைய முத்திரைப் பல்லவிகளையுடைய பாட்டுகளைப்போல் மற்ற ஐரோப்பிய இசை வல்லாரான பிதோவனும், வேகனும் எழுதியிருப்ப தாகத் தெரியவில்லை. அவருடைய வியாதி மேன்மேலும் துன்புறுத்த ஆரம் பித்தது. அவர் கண்கள் ஒளியை இழந்தன. அவரும் மில்டனைப் போலவே தமது கண்களிருண்ட காலத்தில் பல அருமையான பாக்களிசைத்தார். இப் பெரும்பிணி அவரது மனோதிடத்தையும் சாந்தியையும் கலைக்கவில்லை.

இவ்வளவு துன்பங்களுக் கிடையிலும் அவர் நண்பர் ஒருவருடைய உதவியால் கீதமிசைப்பதைப் பின்னும் மேற் கொண்டனர். பாடும் சமயங் களில் யூதத்தலைவரான சேம்சனுடைய கதை ஞாபகத்திற்கு வாராமற் போ காது. சிலசமயங்களில் சேம்சன் கூறிய பாடலைச் சோகம் ததும்பிய குரலில் பாடிக் கேட்போர் மனதைக் கரைப்பார். இவ்வந்தியகாலத்தில் அவருடைய நிபுணத்துவத்தைப் போற்றும் பலரும் அவரது நண்பர்களும் கூடவே யிருந்து பணிவிடைகள் செய்து வந்தனர். இதுதான் அவர்வாழ்வின் கடைசி அத்தியாயம்.

வாழ்வு முடிவடையும் சமயம் நெருங்கியபோது அவர் 'எனது தேவன்' (Messiah) என்னும் பாடலை வெகு ரசத்துடன் பாடினர். பாடிக்கொண் டிருந்த உருக்கத்திலேயே மயக்கத்தை அடைந்தார். அதுதான் முடிவென்று அவருடைய நண்பர்கள் படுக்கையில் அவரைப் படுக்கவைத்து வேண்டிய உபசாரங்களைச் செய்தனர். 1759ஆு ஏப்ரல்மீ 14உ காலை எட்டுமணிக்கு புலாலுடம்பை நீத்து என்றுமழியாத புகழுடம்பைப் பெற்றார். அவருடைய சவத்தை பாடகர் மூலையில் வெஸ்ட் மின்ஸ்டர் ஏபியில் பெரிய புலவர்களின் வரிசையில் அடக்கம் செய்தார்கள்.

ஹேண்டல் ஓர் மகாகவி. மனோஎழுச்சியிலும், கற்பனுசக்தியிலும் ஷேக்ஸ் பியருக்கும், மில்டனுக்கும் சமமானவர். ஆனல் இசையில் அவருக்கொப்பாக

யாரையும் கூறமுடியாது. ஜெர்மனி தேசத்தில் பிறந்து, இட்டாலியில் சங்கீதம் பயின்று, பெரும்புகழை எங்கணும்பெற்று, இங்லாந்து சென்று அங்குள்ளவர்கட்கு இசையில் சுவையைப் பெறச் செய்து அழகான கீர்த்தனைகளியற்றி என்று மழியாது தம்பெயரை நிலைநாட்டினுர் ஹேண்டல். இங்கிலாந்து இசைச் சுவையில் தாழ்ந்திருந்த காலத்தில் அது எல்லா நாடுகளைக் காட்டிலும் அதிகமாக இன்பமும் ஊக்கமும் எடுத்துக் கொள்ளுமாறு செய்தது அவர்தான். அதனுல் அவர் தேசபக்தர்கள், தேசநலந் தேடியோர் உறங்கும் வெஸ்ட்மின்ஸ்டர் ஏபியில் உறங்குவதுமிகவும் தகுதியானதே. அப்பேர்பட்ட பெரியாரைத் தம்மிடை பெற்றது ஆங்கிலேயருடைய பெரும் பாக்கியமே.

## தரகர் பித்தலாட்டம்.

கோயமுத்தூரிலும் அதைச்சேர்ந்த கிராமங்களிலும், சங்கீதம் பயின்றவரும், பெரியமேளம் வாசிக்கிற தொழிலாளர்களும் ஷை ஜில்லா பொதுஜனங்களால் நடத்தப்படும் சுபகாரியங்களிலும் ஆலயங்களிலும் வழக்கமாய் போய் வாசித்துக்கொண்டிருக்கிறுர்கள். இந்த ஜில்லாவில் ஷை கலைத்தொழிலைச்செய்து ஜனங்களை ஆமோதிக்கச்செய்ய யோக்கியதை இல்லாத சில தரகர்கள் இருந்துகொண்டு பத்திரிகை மூலமாகவும், நேரில் சென்றும், "என்னிடத்தில் பெரியமேளம், பியாண்டு, பாட்டுக் கச்சேரி, கதை செய்வோர், தனிப்பட்ட நாயனக்காரர், இன்னும் பிடில், வீணை, புல்லாங்குழல், மிருதங்கம், தபலா, மோர்சிங், கஞ்சரா, கெடம், ஜலதரங்கம் இவற்றில் பெரிய வித்வான்களும் ஸ்திரீகளும் இருக்கிறுர்கள்; தருவித்து கொடுக்கவுள்ளவன் நான்" என்று அநேகவித பொய் புரட்டுகள் சொல்லி ஏராளமான பணத்தை வாங்கி ஷை வித்வான்களையும் ஏமாற்றி ரூ. 100 பேசினுல் 75 என்று சொல்வதுடன் 100-க்கு 10, 20 தரகு எடுப்பதும் ஷை தரகன் செலவு வகையும் ஷை வித்வான்கள் போக்கு வரவு செலவுகளையும் காப்பி செலவுகளையும் பொதுவில் எடுத்துக்கொள்வதும் கிராக்கிகளிடத்திலும் 10, 30 கமிஷன் வாங்கிக்கொள்வதும் தவிர சங்கீதம் பயின்றவர்களையும் அழைத்து வந்து அவர்களுக்கு செலவு சார்ஜ் சம்பாவனை தொகை கொடுக்காமலும், அப்படி இப்படி என்று புகார்கள் சொல்லி முடுக்கியும் அனுப்பிவிடுகிறுர்கள். ஷை வித்வான்கள் தம் இருப்பிடம்போய் சேருவதற்கும் பெரும் கஷ்டப்படுவதுடன் அலைச்சலும் படுவதினுல் ஷை ஜில்லா பொதுஜனங்களுக்கும், சங்கீதம் பயின்றவர்களுக்கும் கெட்ட அபிப்பிராயம் உண்டாக்குகிறுர்கள். ஷை புரோக்கர்கள் வார்த்தையைக் கேட்டு வருவதுடன் சுப காரியங்கள் செய்யும் கிராக்கி மூலியமாகவே வருவது மேலான விஷயமென்று எச்சரிக்கிறேன்.

**கோவை. நாதஸ்வரம், நடேச முதலியார்.**




# ஸ்ரீமதி சரோஜினி தேவி.

(A. S. கேஸடை, ஆசிரியர்.)

## 1. பூர்வாங்கம்.

நீர்வள நிலவளம் நிரம்பிய வங்க நாட்டில் கங்காநதி பாயும் பைரம் நகரம் எனும் ஊரில் புராதன அந்தணர் மரபின் வழித்தோன்றிய சாடர்ஜி வம்சத்தில் அகோர நாத சட்டோபாத்தியாயர் சீருஞ் சிறப்புங் கொண்டு வாழ்ந்து வந்தார். இவர் பழையதொரு பிராமணகுடியிற் பிறந்தும், நவீன ஆசார சீர்திருத்தங்களையே பின் பற்றி இக் காலத்திற் கேற்றவாறு மேனாட்டுச் சரித்திர சாஸ்திர அனுபவத்தை மேற்கொள்ள கடற் பிரயாணஞ் செய்தார். தென்னிந்தியாவைப் போன்றே, வங்கநாட்டிலும் வைதீகர்கள் கடல் யாத்திரை சாஸ்திர சம்மதமன்று எனுங் கொள்கையைக் கொண்டு கூக்குரலிட்டனர். ராஜாராம் மோஹன்ராய் போன்ற பிராமண பிரமுகர்கள் கடல் கடக்க ஆரம்பிக்கவே, நாளடைவில் இக் கூக்குரல் ஒருவாறு மறைந்து, எண்ணிறந்த இளைஞர்கள் ஆண்டு தோறும் மேனாட்டுக்குச் செல்வாராயினர். அகோரநாதர் இங்கிலாந்திற்குச் சென்று கல்வி பயின்று 1877-ம் வருடத்தில் எடின்பர்க் எனும் நகரிலுள்ள சர்வகலா சபையில் சாஸ்திர பட்டமும் பெற்றார். இத்துடன் இவர் சாஸ்திர அநுபவம் கொள்ள சொற்ப காலம் பான் நகர சர்வகலாசாலையிலும் இருந்தார். இங்கிலாந்தில் சாஸ்திர பட்டம் பெற்று, இந்தியாவிற்குத் திரும்பினவுடன் இவர் நைஜாம் இராஜ்ஜியத்தின் தலைநகரான ஐதராபாத்தில் நைஜாம் காலேஜ் எனும் சர்வகலா சபையொன்று ஸ்தாபித்தார். அந்நாள் முதற்கொண்டே இவர் கல்வியின் முன்னேற்றத்திற்காகச் சாலவும் உழைத்து வந்தார். இத்தகைய கல்விப் பிரியரின் ஸீமந்த (மூத்த) புத்திரியே நம் சரோஜினி தேவியார்.

## 2. பிறப்பும் இளமையும்

இவ்வம்மையார் 1879-ம் வருஷம் பிப்பரவரி மாதம் 13ந் தேதியன்று ஐதாரபாத்தில் பிறந்தார்கள். பிறந்த குழந்தையைப் பெற்றோர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்துச் சிறுபிராயந் தொட்டே கல்வியும் கற்பிக்கலாயினர். ஸரோஜினி சாஸ்திரத்திலும் ரசாயனத்திலும் மிக்க தேர்ச்சி அடைய வேண்டுமென்னும் பேரவாக்கொண்டு, அகோரநாதர் தன்னருமை மகள் சரோஜினிக்கு இவ்விரு கல்வியையும் நன்கு புகட்டலானார். சரோஜினி ஒரு காலத்தில் சிறந்த கணித நூல் வல்லவளாகவோ அன்றி மேலான சாஸ்திர பண்டிதையாகவோ வரப்போகின்றாளென எண்

ணங்கொண்டிருந்த அகோரநாதர் சரோஜினியிடம் கவிப்புலமையின் இயற்கையமைப்பைக் கண்டார். சரோஜினிக்கு பதினோராம் ஆண்டு நடக்கையில் ஒருநாள் பீஜ கணிதத்தில் கணக்கொன்று சரிவரத் தெரியாமல், வெகு நாழிகைபரியந்தம் யோசனை செய்துகொண் டிருக்கையில் திடீரென்று கணக்குக்குப் பதிலாகக் கவிகள் தோன்றின வென்பதை சரோஜினியே பன்முறை கூறியிருக்கின்றனர். அந்நாள் தொடங்கியே சரோஜினியின் கவித்திறமை எண்டிசையும் விளங்கிற்று. சரோஜினி தன் மங்கைப் பருவமான பதின்மூன்றும் பிராயங்கொண்டிருக்கையில் 1300 அடிகள் நிறைந்த பெரிய பாமாலை யொன்று தொடுத்தனர். இத்துடன் இரண்டாயிரம் சீர்கள் கொண்ட நாடக மொன்றையும் ஆறு நாட்களில் எழுதி முடித்தார். இவ்வம்மையார் 14, 16 பிராயத்தினிடையே படித்த புத்தகங்கள் எண்ணிலாதன. சதா புத்தகமும் கையுமாகவே இருப்பார். சரோஜினி தமது பன்னிரண்டாம் பிராயத்திலேயே சென்னை சர்வகலாசபையின் பிரவேசப் பரீட்சையில் தேறினர். சிறு பெண்ணொருத்தி பிரவேசப் பரீட்சையில் தேறினளென்னுஞ் செய்தி நாடெங்கும் பரவி, ஸ்திரி புருடர்களனைவருக்கும் ஓர் எழுச்சியை யுண்டாக்கிற்று. சரோஜினியால் உண்டான இப் புதிய கிளர்ச்சி காட்டுத் தீப்போல் எண்டிசையும் பரவி, ஸ்திரீகளுக்குக் கல்வி வேண்டாமெனக் கூறின அறிவிலிகளும் தத்தம் இல்லத்துப் பெண்களுக்கு உயர்தரக் கல்வியைப் போதிக்க முன் வந்தனர். அநேக பெண்பாடசாலைகள் ஊரெங்கும் ஸ்தாபிக்கப்பட்டன.

### 3. கடல் யாத்திரை.

பெண்களுக்குள் ஓர்வித உணர்ச்சி உண்டாகித் தாங்களே விர்த்தியடைய நாடெங்கும் சங்கங்களை ஸ்தாபித்தனர். 1895-ம் வருஷம் சரோஜினி இங்கிலாந்திற்குச் சென்று, லண்டன்மா நகரத்தில் உள்ள இராஜ கலாசாலையிலும், கர்டன் நகரிலுள்ள கலாசாலையிலும் மூன்று வருடகாலம் கல்வி பயின்று வந்தனர். பதினாறு பிராயம் சரிவர நிறையாத பெண்ணொருத்தி கல்வியினிமித்தம் கடல் கடந்து கண்டங்கள் சென்றதைக் கேள்வியுற்ற அநேகர் ஆச்சரிய முற்றனர். கன்னிப் பருவங் கழியா மடந்தை யொருத்தி ஊரார் அவமதிப்புச் சொல்லையுங் கேளாது, எவ்வெவர் தீமையும் மேற் கொள்ளாது, தாய் தந்தையரைப் பிரிந்து, உற்றார் உறவினரையும் துறந்து தன்னந்தனியே கல்விபயில இங்கிலாந்திற்கு வந்துள்ளாளெனக் கேட்ட அநேக ஆங்கில ஸ்திரீ புருஷர்கள் மிகுந்த ஆச்சர்ய முற்றனர். சரோஜினியின் வருகை இங்கிலாந்திலுள்ள ஸ்திரீ புருஷர்களின் மனதைக் கவர்ந்தது. இந்தியப் பெண்களுக்குச் சரியான சுதந்திரமில்லையென மூடத்தனமாய்க் கூறிவந்த கிறிஸ்தவப் பாதிரிகளின் பொச்சாப்பு வார்த்தையைக் கேட்டுப் பலகாலும் இந்தியர்களைத் தூஷித்து வந்த ஆங்கிலேயர்கள் சரோஜினியின் வருகையைக் கண்டவளவில் கண் விழித்துக் கொண்டார்கள். சரோஜினியின் பிரவேசம் இங்கிலாந்தி

லுள்ள ஸ்திரீ புருஷர்களின் விபரீத எண்ணத்தை மாற்றிற்று. இந்தியர்கள் நாகரீக மற்ற ஜாதியார்களென நம்பி வந்த சாமானிய ஆங்கிலேய ஸ்திரீ புருஷர்களனைவரும் சரோஜினியின் வருகையால் இந்தியர்களின் சரித்திரத்தையும் நிலைமையையும் உள்ளபடி அறிய ஊக்கங் கொண்டனர். அதுமுதல் இந்தியர்களிடத்தில் அவர்கள் கௌரவமும் மரியாதையும் பாராட்டி வந்ததுடன், இந்திய ஸ்திரீகள் கல்வி கேள்விகளிலும் மேன்மை கொண்டவர்களென ஆங்கிலேய ஸ்திரீ புருஷர்கள் கருதலானார்கள். சரோஜினி லண்டன்மா நகரிலுள்ள கலாசாலையில் கல்வி பயின்றுவருங்காலையில் இம்மாதின் நுண்ணிய அறிவையும் கவித்திறமையையும் புகழ்ந்து பேசாதார் ஒருவருமில்லை. ஆங்கிலேய ஸ்திரீகளைக் காட்டிலும் இந்திய ஸ்திரீகள் தங்கள் படிப்பில் சிரத்தையையும் ஆசிரியரிடத்தில் பக்தியையும் காட்டுகின்றனர் என்னும் எண்ணம் அக்கலாசாலை உபாத்தியாயர்கள் மனதில் பசு மரத்திலடித்த ஆணிபோல் படியும்படி செய்தனர் நம் சரோஜனி தேவியார்.

## 4. இத்தாலிய வாசம்.

பொழுதெல்லாம் கல்வியிலேயே கழித்து வந்த நம் சரோஜினி தேக வலிமை குன்றி நோய் கொண்டனர். நோய் நீங்கி தேகசுகம் பெறும் பொருட்டு இங்கிலாந்தை விட்டு இதாலி தேசத்திற்குப் பிரயாணமானார். அந் நாட்டில் சதா தென்றல் வீசுதலால் வேனிற் காலமும் தண்ணென்றிருக்கும். எங்கு பார்த்தாலும் கழனிகளும் சோலைகளும் நிறைந்து விளங்கும். வர்ஜில், தாண்டி முதலிய பல கவிரத்தினங்கள் பிறந்து புகழ் பெற்ற இந் நாடு கவி வாணர்களுக்கு ஏற்ற இடமாதலால் நம் கவியரசியான சரோஜினியும் இந் நாட்டை யடைந்தார்.

## 5. விவாகம்.

1898-ம் வருடம் செப்டம்பர் மாதம் சரோஜினி ஐரோப்பாவிலிருந்து ஐதராபாத்திற்குத் திரும்பி வந்தார். இரண்டுமாதங் கழிந்தபிறகு மார்கழி மாதத்தில் டாக்டர் நாயுடு என்பவரைக் கடிமணம் செய்துகொண்டார். உயர்ந்த பிராமண குலத்தில் தோன்றிய மாது வேறொரு குலத்தைச் சார்ந்த ஒருவரை மணம் செய்துகொண்டாரென்னும் செய்தியைக் கேட்ட உலகத்தாரனேகர் கடிந்து பேசினார்களெனினும் யோசிக்கு மிடத்து உண்மைக் காதல் ஏற்பட்ட விடத்தே கடிமணம் புரிதல் நலமெனக் கொண்டு, சரோஜினி டாக்டர் நாயுடுவைத் தம் கணவராக வரித்தார்.

## 6. சம்பூர்ணம்.

சரோஜினி டாக்டர் நாயுடுவை மணம் புரிந்து, ஜயசூரிய, பத்மஜா, இரணதீர, லீலாமணி என நான்கு குழந்தைகளைப் பெற்றார். சரோஜினி தம் இளமை முதற்கொண்டே தேசாபிமான வாழ்க்கைக்குரிய உண்மை நிலைகளை நன்கு அறிந்திருந்தார். தேசீய வாழ்க்கையில் மதுரமாய்க் கவிபாடி ஜனங்களைக் களிப்பிப்பதோடு மதிக்கத்தக்க தேசநல ஊழியமும் புரிந்து வருகிறார். இவ்வம்மையார் நீடூழிகாலம் சுகவாழ்வு வாழ அன்னை பாரததேவி அருள்புரிவாளாக.

---



# ஆரியசித்தாந்தம்.

(299-ம் பக்கத் தொடர்ச்சி.)

## உலகஞானம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்.)

தவசு, மன அடக்கம், வேதம், அறிவு, யாகம், நல்ல விவாகம், அன்னதானம் ஆகிய இவைகள் எந்தக்குடியில் முறைப்படி செய்யப்பட்டு வருகின்றனவோ அது உயர் குடியென்று மதிக்கப்படுகிறது. நன்னெறியினின்று வழுவாதவர்களும், பரம்பரையான வியாதி யற்றிருப்பவர்களும் உயர்குடியினராம். எல்லாத் தருமங்களையும் மகிழ்ச்சியுடன் செய்கிறவர்களும், தம் வமிசத்தைப் பிரகாசிப்பிக்கத்தக்க பரிசுத்தமான விருப்பமுள்ளவர்களும், பொய் சொல்லாமலிருக்கிறவர்களும் உயர்ந்த வமிசத்தினராம். துஷ்ட சகவாசத்தாலும், பிறர் தம்மிடம் கொடுத்துவைத்த பொருளில் கெட்ட எண்ணம் கொள்வதாலும், அறிஞரை நிந்திப்பதாலும் உயர்குடி தாழ்வடைகின்றது. சுற்றத்தாரோடு செல்வம் பசுக்களை யுடையவர்களாயிருந்தாலும் உயர்ந்த வமிசமாக மதிக்கப்படும். நாகரிசமும் நல்ல ஒழுக்கமும் இல்லாதவர்களாயிருந்தால் மதிக்கப்படுவதில்லை. செல்வ மில்லாமலிருந்தாலும் நாகரிகமும் நல்லொழுக்கமும் உள்ளவர்களாயிருந்தால் அவர்கள் உயர்குடியினராக மதிக்கப்பட்டுப் பெரும்புகழடைவார்கள். நாகரிகத்தையும் ஒழுக்கத்தையும் ஜாக்கிரதையாகக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும். செல்வ மில்லாதவனாயிருந்தால் அவன் இல்லாதவனல்லன். நாகரிசமும் ஒழுக்கமும் இல்லாதவனாயிருந்தால் அவன் தரித்திரனேயாவான். பசு, தானியம், மிருக முதலியவைகளை ஏராளமாகவுடையவனாயிருந்து ஒழுக்க மில்லாதவனா யிருப்பவன் மதிப்பையும் புகழையு மடையான்.

நம்முடைய வமிசத்தில் ஒருவரும் சண்டை மூட்டிவிடாமலிருக்கட்டும். ஒருவனும் இராஜதுரோகி யாகாம லிருக்கட்டும். ஒருவனும் பிறர் பொருளைக் கவராமலிருக்கட்டும். ஒருவனும் உட்கலகம் விளைவிக்காம லிருக்கட்டும். ஒருவனும் வஞ்சகனாகவாவது பொய்யனாகவாவது ஆகாமலிருக்கட்டும். ஒருவனும் கொலை செய்யாமலும், பெரியோர்கள்மேற் பொறாமை கொள்ளாமலும், பிறரைக் கெடுக்காமலு மிருக்கட்டும். நமது வீடுதேடி வந்தவர்களுக்குப் படுக்க வைக்கோல், உட்கார இடம், கைகால் முகம் கழுவுதற்கு நீர் இவைகள் சித்தமா யிருக்கட்டும். புண்ணியசாலிகள் நல்ல நடக்கையில் விசுவாசமுள்ளவர்களா யிருக்கவேண்டும். விருந்தாளிகள் வந்தபோது இவைகளெல்லாம் சித்தமாயிருக்கவேண்டும். சயந்தமரம் மெல்லிதா

யிருந்தாலும் பாரத்தைச் சுமக்கச் சக்தியுள்ளதாயிருக்கிறது. பருமனுயிருக்கிற மற்ற மரங்கள் சுமக்கமாட்டா. உயர்குடியிற் பிறந்தவர்கள் சாதாரண மனிதர்களால் தாங்கமுடியாத பாரத்தைத் தாங்கத்தக்கவர்களா யிருக்க வேண்டும். எவன் கோபத்தால் பயமுண்டாகுமோ அவனைச் சிநேகமாகக் கொள்ளக்கூடாது. எவன் பயத்தால் சேவிக்கப்படுகிருனே அவனுடைய சிநேகமுமாகாது. எவன் பிதாவைப்போல நேசிக்கத்தக்கவனே அவனே சிநேகனுவான். மற்றவர் சிநேகம் சொன்மாத்திரமே. எவனுடைய இருதயம் உறுதியற்றதாயிருக்கிறதோ, எவன் பெரியோர்சேவை செய்யாமலிருக்கிருனே, எவன் சாந்தமில்லாத குணமுள்ளவனே அவன் சிநேகிக்கத்தக்கவனல்லன். உறுதியில்லாத நெஞ்சு உடையவனையும், மன அடக்கமில்லாதவனையும், புலனுக்கு அடிமைப்பட்டவனையும், நீரற்ற குளத்தை அன்னம் விடுகிறதுபோல விட்டுவிடவேண்டும். பல ஈனமான மன முள்ளவர்கள் திடீரென்று கோபித்துக்கொள்கிருர்கள். காரணமில்லாமலே பிரியப்படுகிருர்கள். துக்கம் பலத்தை அழிக்கும். துக்கம்அறிவைக் கெடுக்கும். துக்கம் வியாதியை உண்டாக்கும். துக்கம் நினைத்தபொருளைக் கொடாது. அன்றியும் பகைவர்களுக்குச் சந்தோஷத்தை யுண்டாக்கும். ஆகையால் துக்கத்துக்கு இடம்தரக்கூடாது. மனிதன் அடிக்கடி சாகிருன்; அடிக்கடி பிறக்கிருன். அடிக்கடி வளர்கிருன். அடிக்கடி கேட்கிருர்கள். அடிக்கடி கேட்கப்படுகிருர்கள். அடிக்கடி புலம்புகிருர்கள். சுகம் துக்கம், குறைவு நிறைவு, இலாபம் நஷ்டம், ஜீவித்தல் மரணமடைதல், இவைகளை எல்லாரும் விதி வசத்தால் முறைப்படி அனுபவிக்கிருர்கள். ஆகையால் மன அடக்கமுள்ளவன் துக்கத்தையும் சந்தோஷத்தையும் ஒருபோதும் அடையக்கூடாது. ஆறு புலன்களுக்கும் ஒருபோதும் ஓய்வு இல்லை. ஒருபாத்திரத்தின் வாயின் அளவுக்கேற்றபடி தண்ணீர் வருகிறதுபோல, அந்தப் புலன்களின் வழியாக அறிவும் வெளிப்படுகிறது.

கவலையை ஒழிப்பதற்குப் பேராசையையும் புலனுக்கு வசப்பட்டிருப்பதையும் முற்றும் ஒழித்துத் தவத்தையும் ஞானத்தையும் அடையவேண்டும். சுய அறிவினுலேயே பயம் ஒழிகிறது. தவசினுலே மதிப்புள்ள பெரிய பொருள் அடையப்படுகிறது. பெரியோர்களை அடுத்ததினுலே கல்வியுண்டாகிறது. மன அடக்கத்தினுலே சமாதானம் உண்டாகிறது. யோக்கியதையில்லாமல் இரட்சிப்பை விரும்புகிறவர்கள் தானத்தைச் செய்யவேண்டும். அல்லது வைதிக கருமானுஷ்டானத்தைச் செய்யவேண்டும். கோபத்தையும் பேராசையையும் ஒழிக்கவேண்டும். ஆயுள் முழுமையும் தீர்த்தயாத்திரை செய்யவேண்டும். தருமத்தையும் கொடிய தவசையும் செய்யவேண்டும். இவற்றினுல் சந்தோஷம் உண்டாகும்.

தங்கள் பந்துக்களுடன் சமாதானமா யிராதவர்கள் நல்ல படுக்கையை உடையவர்களாயிருந்தாலும் நித்திரை செய்யமாட்டார்கள். அவர்கள் பெண்க

ளாலும் வந்தியர்களின் பாடல்களாலும் மகிழ்ச்சி யடையமாட்டார்கள். அவர்கள் ஒருபோதும் தருமம் செய்யமாட்டார்கள். இந்த உலகத்தில் அவர்களுக்கு இன்பமே கிடையாது. ஒருபோதும் பெருமையுமில்லை. அவர்களுக்குச் சமாதானமும் மகிழ்ச்சியும் ஒருபோதுமில்லை. அவர்களுடைய நன்மைக்காகச் செய்யப்படுகிற மந்திராலோசனையும் பிரியத்தைச் செய்யாது. அவர்கள் தங்களிடத்தில் இல்லாததை ஒருபோதும் அடையமாட்டார்கள். தம்மிடத்தில் உள்ள பொருள்களைப் காப்பாற்றிக்கொள்வது மரிது. அவர்கள் ஆபத்திலிருந்து தப்புவதற்கும் மார்க்கம் கிட்டாது. பசுவினிடத்தில் பாலிருக்கிறது. அதுபோலப் பந்துக்களிடத்தில் பயமிருக்கிறது. சமநீள முள்ள அநேக நூல்களை ஒன்றாகச் சேர்த்து முறுக்கினால் அது இடைவிடா மற் சுழலும் அநேக விளையாட்டுக் கருவிகளைத் தாங்கும் சக்தியை யுடையதாகும்; அதுபோல பந்துக்களுடன் கூடினவன் பலமுள்ளவனாவான். பல கொள்ளிக்கட்டைகள் தனித்தனியே பிரிந்தால் அது எரியாமல் புகையை மாத்திரம் உண்டாக்கும். அவைகள் ஒன்றாய்க்கூடினால் ஜுவாலை வீசிக்கொண்டு எரியும். உறவினரிடத்திலும் இப்படியே அறியத்தக்கது. அரசனே! பெரியோர், பசு, ஸ்திரீகள், உறவினர் இவர்களைக் கொடுமையாக நடத்துகிறவன், பழுத்தபழங்கள் காம்பினின்றும் நழுவுவதுபோலத் தன்னிலையினின்றும் சீக்கிரம் விழுந்துவிடுவான். தனியாக நிற்கிற மரம் பெரிதாயும் பல முள்ளதாயிருந்தாலும் பெருங்காற்றினால் வேர் அறுந்து கீழே விழும். பல வற்றினுடன் கூடியிருக்கிற மரம் பெருங்காற்றை எதிர்த்து நிற்கும் வல்லமை யுடையதாயிருக்கும். ஏனென்றால் எல்லாம் சேர்ந்து ஒற்றுமையா யிருக்கிறமையினால்தான். தனியாயிருக்கிறவன் தருமங்களைச் செய்தாலும் தனிமரத்தைப்போலச் சத்துருக்களால் ஜயிக்கப்படுவான். உறவினருடன் சேர்ந்து ஒற்றுமையாயிருக்கிறவன் தடாகத்திலிருக்கிற தாமரையைப்போல விருத்தி யடைவான்.

பெரியோர்கள், பசுக்கள், ஸ்திரீகள், பந்துக்கள், குழந்தைகள், புசித்துக்கொண்டிருக்கிறவர்கள், அடைக்கலம் புகுந்தவர்கள் இவர்களைக் கொல்லக்கூடாது. செல்வமும் நற்குணமும் இல்லாதவர்களாயிருந்தாலும் இதைச் செய்யக்கூடும். ஒருவன் சுகமாயிருந்தால் சகல நன்மைகளையும் தேடிக்கொள்ளலாம். சுகமில்லாதவனும் வியாதியா யிருக்கிறவனும் செத்தவனே யாவான். கோபம் என்பது கசப்பும் உறைப்பும் சிவப்புமுள்ள ஒரு இனமா யிருக்கிறது. அதன் பலனும் துன்பமேயாம். கோபமானது சரீரத்திலிருந்து உற்பத்தியாகாத ஒருவிதமான கொடிய தலைவலியா யிருக்கிறது. புத்தியில்லாதவர்கள் அதைத்தடுக்க முடியாது. அதைத் தடுக்கிறவன் சுகமாயிருப்பான். வியாதியாயிருக்கிறவர்கள் எவ்வகைச் சுகத்தையும் அனுபவிக்கமாட்டார்கள். வியாதிக்காரர்கள் துக்கத்தினால் நிறைந்திருக்கிறபடியால் சந்தோஷமின்னதென்று அறியமாட்டார்கள். செல்வத்தை யெப்படி அனுப

விக்கிறதென்றும் அறியமாட்டார்கள். பலமானது மிருதுவானதற்கு ஒருபோதும் இடைஞ்சல் செய்வதில்லை. ஆனால் அது மிருதுவானதுடன் கலந்திருக்கிறது. துர்வழியில் அடைகிற வாழ்வு சீக்கிரம் அழிகிறது. மிருதுவினாலும் பலத்தினாலும் அடையப்படுகிற வாழ்வு புத்திர பௌத்திரர்களும் பரம்பரையாய் அனுபவிக்கத்தக்கதாயிருக்கிறது.

பிரஜாபதியின் புத்திரனான வைவசுதன் பதினாறுபேர்கள் ஒன்றுமில்லாத இடத்தில் காமுஷ்டியால் அடித்துக்கொள்கிறவர்களாகவும், நீராவிரூபமான இந்திரதனுசை வளைக்க முயற்சிக்கிறவர்களாகவும், தொடமுடியாத சூரியகிரணத்தைப் பிடிக்கிறவர்களாகவும் இருப்பார்களென்று சொன்னான். அவர்கள் யாரென்றால் அடக்கமுடியாதவர்களை அடக்க முயல்கிறவன், சொற்ப இலாபத்தால் திருப்தியடைகிறவன், பகைவர்களை வணங்கி உபசரிக்கிறவன், ஸ்திரீகளைச் சிறைப்படுத்துகிறவன், கேட்கத்தகாதவர்களிடம் யாசிக்கிறவன், ஏதாவதொன்றைச் செய்துவிட்டுப் பெருமை பாராட்டுகிறவன், உயர்ந்த வமிசத்தில் பிறந்தும் துர்க்கருமங்களைச் செய்கிறவன், சக்தியில்லாதவனாயிருந்தும் பலவானோடு பகைத்துக்கொள்கிறவன். பரிகாசம் பண்ணிக்கொண்டு கேட்கிறவனிடத்தில் பேசுகிறவன், அடையமுடியாத பொருளை அடைய விரும்புகிறவன், மருமகளுடன் சரசமாய்ப் பேசுகிற மாமனார், பிறனுடைய வயலில் தன் விதைகளைத் தெளிக்கிறவன், தன் சொந்த மனைவியைப்பற்றி இழிவாகப் பேசுகிறவன், பிறனிடமிருந்து வாங்கிக்கொண்டதை மறந்துவிட்டேனென்கிறவன், புண்ணியக்ஷேத்திரங்களில் கொடுக்கிறேனென்று வாக்குத்தத்தம் செய்துவிட்டுப் பின்கொடாதவன், பொய்யை மெய்யென்று ரூபிக்க முயல்கிறவன், ஆகிய இந்தப் பதினாறு பேர்களுமாம். ஒருவன் பிறனிடத்தில் நீதியாக நடந்தால் அவனும் நீதியாகவே நடப்பான். இது இராஜநீதி முறையாம். எவன் தன்னிடத்தில் வஞ்சனையாக நடக்கிறானோ அவனிடத்தில் தானும் வஞ்சனையாக நடக்கவேண்டும். யோக்கியமாக நடக்கிறவனிடத்தில் யோக்கியமாகவே நடக்கவேண்டும். மூப்பு அழகைக் கொல்லும். பொறுமை கவலையை அழிக்கும். மரணம் ஜீவனைக் கொல்லும். தருமாசரணை உலக இன்பத்தை அழிக்கிறது. காமம் மானத்தை அழிக்கிறது. துஷ்டருடைய சிநேகிதம் நல்லொழுக்கத்தை அழிக்கும். கோபம் செல்வத்தை அழிக்கிறது. பருவம் எல்லாவற்றையும் அழித்துவிடும்.

ஒருவன் தன்னிடத்தில் நம்பிக்கையாக ஒப்புவித்த மனைவியை அபகரிக்கிறவனும், குருதல்பகமனம் செய்கிறவனும், மதுபானம் செய்கிறவனும், அந்தணர் பொருளை அபகரிக்கிறவனும், அடைக்கலம் புகுந்தவர்களைக் கொல்கிறவனும், ஆகிய இவர்கள் எல்லாரும் பிரமஹத்திசெய்த பாபிகளுக்குச் சமானமானவர்கள். இவர்களுடன் சேர்ந்தவர்கள் பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டுமென்று வேதம் கூறுகின்றது.

---

வேதாந்தம்

T. SAMBANDAN, ENGRAVER No 208 RAJAPPA CHETTY ST PARK TOWN MADRAS

# வேதாந்த சார சங்கிரக வசனம்.

(311-ம் பக்கத் தொடர்ச்சி.)

(தமிழ்ப்பண்டிதர். பூ. ஸ்ரீநிவாசன்)

## சூனியவாத நிராகரணம்.

(இதுகாறுங் கூறப்பட்ட வாதங்களில் முன் முன் வாதங்கள் பின் பின் வாதங்களால் கண்டிக்கப் பட்டுப் போயினமையின் கடைசியாக எஞ்சி நின்ற சூனிய ஆத்ம வாதம் ஈண்டுக் கண்டிக்கப் படுகின்றது.)

ஆலம் வித்தில் ஆலவிருட்சம் அடங்கி யிருத்தல் போல, புத்தி முதலிய சகலமும் நித்திராவத்தையில் தமக்குக் காரணமான பிரகிருதியி னிடத்து ஒடுங்கி நிர்விகார வடிவமாக இருக்கின்றனவேயன்றி சூனியமா யிருப்பதில்லை. ஆல விருட்சம் ஒரு காலத்தில் முளைவடிவமா யிருக்கும். (இதுகாரியம்.) மற்றொரு காலத்தில் வித்துவடிவா யிருக்கும். (இதுகாரணம்.) அவ்வாறே உலகம் ஒரு காலத்தில் காரிய வடிவமாகவும் மற்றொரு காலத்தில் காரண வடிவாகவு மிருக்கின்றது.

'சிருஷ்டிக்கு முன்பு உலகம் அசத்து வடிவா யிருந்தது என்று சுருதி கூறிற்றே யெனின்: அசத்துரூப மென்பதற்கு வியக்தமாகாத (வெளிப்படாத) நிலை யென்பது பொருளே யன்றி சூனிய ரூப மென்பது பொருளன்றாம். நித்திராவத்தையில் ஜகத்தின் பேதத்தை நிர்விகாரமானதாக வேதம் கூறுகின்றது. சுருதி யுக்திகளால் நிச்சயிக்கப்பட்ட இவ்வர்த்தத்தை யறியாமல் உண்மை (தத்துவம்) அறியாதார் உலகு காணப்படாம லிருத்தலைச் சூனிய மென்கின்றனர்.

### அசத்திலிருந்து சத்துண்டாயிற் றென்பது (கண்டனம்)

இல்லாத வஸ்துவினின்று உள்ள வஸ்து உற்பத்தியாயிற் றென்பதை என்றும் எவரும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. இல்லாத பொருள்களாகிய முயற்கொம்பினின்றும், ஆகாயப் பூவினின்றும் என்ன உற்பத்தி யாகும்? (மண்ணில்) இல்லாத குடம் மண்ணிலிருந்து உண்டாகாது. அங்ஙனம் உண்டாகுமாயின் அக்குடம் மணலிலிருந்தேனும் நீரிலிருந்தேனும் உண்டாகட்டும் பார்ப்போம். அங்ஙனம் உண்டாதலில்லை. ஆதலால், எதனுல் எந்தப் பதார்த்தம் உண்டாகின்றதோ அதனிடத்து அப் பதார்த்தம் இருந்தே தீரவேண்டும். (இல்லது வாராது; உள்ளது போகாது.) காரியத்தின் தன்மை காரணத்தில் இன்றேல் எல்லாச் சாஸ்திரங்களிலும் கூறப்பட்டு எல்லாப் பதார்த்தங்களிலும் பிரசித்தமாயுள்ள காரிய காரண லட்சணம் விருத்தமாகும். சுருதியும் 'அசத்தினின்று சத்து தோன்றுது' எனக் கூறுகின்றது. ஆகையால் அசத்தால் சத்துண்டாதல் அசம்பாவிதமாம். சூனியம் என்பதன் பொருள் மித்தை யென்பதேயாம். ஓ! பிராந்தி யுடையவனே! அவ்வியக்த

மென்னும் பெயருடையதும் ஞானமுடையதும் சத்துவ வடிவினதுமாகிய ஆத்மாவினிடத்து சூனியத்தன்மை எங்ஙனஞ் சித்திக்கும்?

(சுழுத்தியில் சூனியம் அனுபவிக்கப் படுகின்றது என்பதற்குச் சமாதானம் கூறப்படுகின்றது.)

சுழுத்தியில் சூனியமே அனுபவிக்கப் படுகின்றதெனக் கூறுவோனைப் பார்த்து இக்கேள்வி கேட்போம்.

சுழுத்தியில் சூனியம் இருக்கின்ற தென்று நீ எதனால் அனுமானித்தாய்? எவ்வாறறிந்தாய்? எனக் கேட்போம்.

இக்கேள்விக்கு அம் மூடன் யாதொரு பதிலும் கூறமாட்டான். சூனியமென்பதற்கு அனுகூலமான லட்சணமுமில்லை; சொல்லுகிறவனுமில்லை. சுழுத்தியிற் காணப்படும் சூனியத்தை அனுபவித்தவன் யாவன்? ஆத்மாவினும் வேறாக யாவனுளன்? ஒருவனுமில்லை. நித்திராவத்தையில் தன்னால் அனுபவிக்கப்பட்ட சூனியத்தை சாக்கிரத்தில் கூறுகின்றான். இதனால் சூனிய பதார்த்தம் தன்னினும் வேறு என்பது விளங்குகின்றது. இங்ஙனமிருக்க, மூடன், தன்னிருப்பை யறியாமல், தன்னால் அனுபவிக்கப்படும் சூனியமே தான் என மயங்குகின்றான்.

நித்திரையில் தான் பிரத்தியட்சமாக சுகத்தை யனுபவிக்கிறான். அவ்வாறு அனுபவிப்பதைப் பிறர் அறிவார்களா? அறியார். இவ்வாறு ஆத்மா, புத்தி முதலானவை யில்லாத நித்திரையில் நித்திராவத்தையையும் அறிகிறான். ஆகையால் ஆத்மா நிர்விகாரியுமாம்.

## ஆத்ம சொரூபம்.

சூரியனது பிரகாசத்தால் உலகிலுள்ள சகல பொருள்களும் பிரகாசிக்கின்றன. இவ்வாறு எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கும் வஸ்து வேறொன்றில்லை. அதுபோல சத்ரூபனும் சுயம்பிரகாசனு மாகிய ஆத்மாவின் பிரகாசத்தால் சகலமும் பிரகாசிக்கின்றனவாகையால் அந்த ஆத்மாவைப் பிரகாசிக்கச் செய்வது வேறொன்று மின்று. புத்தியாதிய வனைத்தும் அசேதனங்களாம். அவை ஆத்மாவைப் பிரகாசிக்கச் செய்வனவாகா. ஆதலால் ஆத்மாவைவிட அனுபவிக்கும் பொருள் வேறொன்றில்லை.

சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னும் மூன்றவத்தைகளிலும் எல்லா விஷயங்களையும் எவன் அனுபவிக்கிறானோ எல்லாவற்றையும் அறியும் அந்த ஆத்மாவை எவன் அறிந்து கொள்ளத் தக்கவனாவான்? எல்லாவற்றையும் தகிக்கும் அக்கினியைத் தகிக்கும் பொருள் மற்றொன்றுண்டோ? இல்லை. அங்ஙனமே, எல்லாவற்றையும் அறிகின்றவனாகிய ஆத்மாவை அறிபவன் ஒருவனுமில்லை. இந்த ஆத்மாவே எல்லாவற்றையு மடைகின்றவனாகலின் இந்த ஆத்மாவை அடைபவன் வேறொருவனில்லை. ஆதலால் ஆத்மாவை எவனும் அடைதல் முடியாது.

நித்திராவத்தையில் புத்தி முதலாகிய அறி கருவிகள் லயமடைதலால் இந்த ஆத்மா ஒருவனே யிருந்துகொண்டு எதையும் காண்பதும் கேட்பதும் அறிவது மின்றி, அந் நித்திராவத்தையி லுள்ள அஞ்ஞானத்திற்கும் தானே சாட்சியாய் சங்கற்பமின்றி சுக சொரூபனா யிருக்கிறான். நித்திராவத்தையில் இவ்வாறு ஆத்மா (தான்) இருக்கிறான் என்பதற்கு அனுபவத்தையே தக்க

பிரமாணமாகக் கொண்டிருக்கின்றனர் சான்றோர். எவ்வாறெனின் 'நான் தூங்கினேன்' என்னு மனுபவம் பாலர் முதல் விருத்தர் வரைக்குமுள்ள அனைவர்க்கு முண்டு. இதனால் நித்திராவத்தையில் 'தான்' இருக்கிறானென் றேற்படுகின்றது. அன்றியும் தூங்கி யெழுந்தவன் 'நான் சுகமாய்த் தூங்கி னேன்' என்று நினைக்கிறான். நித்திராவத்தையில் தான் இல்லாவிட்டால் சுகத்தை யனுபவிப்ப தெப்படி? சுகத்தை யனுபவிக்காவிடின் 'நான் சுக மாய்த் தூங்கினேன்' என்னும் ஸ்மிருதி (நினைப்பு) அவனுக் கெங்ஙன முண் டாகும்? உண்டாகாது. ஆகையால் நித்திராவத்தையில் தான் (ஆத்மா) இருக்கிறானென்பது நன்கு விளங்குகின்றது.

'எந்த அவத்தையில் இச்சை யில்லாமையும் சொப்பனந் தோன்றாமையு முள்ளதோ அந்த அவஸ்தையே சுழுத்தி என்று சுருதி கூறுதலின், சுழுத்தி யில் ஆத்மாவின்றேல் கோரிக்கையில்லா திருப்பது யாருக்கு? பிரிய சீடனே! யோசித்துப் பார். ஆதலால் சுருதியி னபிப்பிராயத்தாலும் நித்திராவத்தை யில் ஆத்மா வுண்டென் றேற்படுகிறது. இந்தப் பிரமாணங்களால் தான் மாத்திரமே யிருப்பவனும் நிர்மலனும் சத்து சித்து ஆனந்தங்களைச் சொரூப மாக வுடையவனுமாகிய இந்த ஆத்மா சாட்சி சொரூபமா யிருக்கிறானென்று பண்டிதர்கள் அறிந்திருக்கிறார்கள். அந்தராத்துமாவிற்கு சத்து சித்து ஆனந் தம் முதலானவையே லட்சணமாம். நித்திய சொரூபனாகையால் முக்காலங் களிலும் பாதிக்கப் படாம லிருப்பதே சத்ரூபத் தன்மையாம். ஞான சொரூபனாகையால் சுத்த சைதன்ய ரூபத்தன்மையே சித் ரூபத்தன்மையாம். நீங்காத ஆனந்த சொரூபனா யிருத்தலே ஆனந்த ரூபத் தன்மையாம்.

## ஆத்மா சத்து.

'நான் இருக்கிறேன்' என்று 'தன் இருப்பு' சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யென்னும் மூன்றவத்தைகளிலும் பொருந்தி யிருக்கின்றது. இத னால் நாசமில்லாத ஆத்மா நித்தியனாவன். 'எப்பொழுது இருந்தேன்' எனப் பார்க்கப்படுவதில்லை; எப்பொழுதும் இருந்தேன் என்னும் அபின்ன ஞானம் காணப்படுகின்றது. அதனால் ஆத்மா நித்தியமாம். கங்கையில் இதுவரையில் எவ்வளவோ அலைகள் வந்து போயின. இப்பொழுது எவ்வளவோ வருகின் றன; ஆனால் எல்லா வற்றிலும் ஜலம் ஏகவடிவமாகவே இருக்கின்றது. அது மாறுபடுவதில்லை. அவ்வாறே, பாலியம் முதலிய தசைகளிலும் சாக்கிரம் முதலிய அவத்தைகளிலும் தோஷம் நிர்த்தோஷம் முதலிய புத்தி விருத்தி களிலும் அனேகம் அழிந்தன. இப்பொழுதும் அனேகம் அனுபவிக்கப்படு கின்றன. இவைகளும் அழிந்து இன்னும் அநேகம் தோன்றும்.) ஆனால் இவையெல்லாவற்றிலும் நான் இருக்கிறேனென்றும் 'தன்னிருப்பு' மாறா மல் ஏகரூபமாகவே யிருக்கிறது. ஆதலால் ஆத்மா நித்தியன் அடிக்கடி பேதப்பட்டுக்கொண் டிருக்கும் அகங்காரம் முதலானவை ஒவ்வொரு நொடி யும் மாறுபடுகின்றவை யாகலின் அவை விகாரமடைவனவாம். ஆத்மா நிர்க் குணனாகலின் மாறுபடுதலில்லை. இந்த ஆத்மா நிர்விகாரி யாகலின் நித்தியனாம்.

## ஆத்மா சித்து.

எந்த நான் கனவைக் கண்டேனோ எந்த நான் சுகமாய்த் தூங்கினே னோ அந்த நானே பின்பு விழித்துக் கொண்டேன் என்றிவ்வாறு தன் இருப்பு அகண்டமாய் அனுபவிக்கப் படுகின்றது. இதிற் சந்தேகமில்லை யல்லவா?

சடப் பொருள்களைப் பிரகாசிப்பிக்கும் சூரியன் பிரகாச ரூபியேயன்றி சடவுருவினனன்று. அதுபோல புத்தி முதலானவைகளைப் பிரகாசிக்கச் செய்யும் ஆத்மாவும் ஞானவடிவினனே யன்றி சடரூபனன்று. சூரியவொளியில்லாமல் சடபதார்த்தங்கள் சிறிதும் பிரகாசிக்க மாட்டா. அவ்வாறே ஆத்மாவில்லாமல் புத்தி முதலானவை இருப்பதாக எள்ளளவும் தோன்றாது. ஆகையால் சூரியன் எப்படி ஒளிவடிவினனோ அப்படியே ஆத்மாவும் சித் ரூபன். சூரியன் தான் பிரகாசிக்கும் விஷயத்திலாயினும் பிறவற்றைப் பிரகாசிப்பிக்கும் விஷயத்திலாயினும் மற்றொன்றின் பிரகாசத்தைச் சிறிதும் இச்சிப்பதில்லை. அவ்வாறே சித்ரூபனாகிய இந்த பரமாத்மாவும் தன்னை யுணர்த்தும் விஷயத்திலாயினும் அகங்காராதிகளைப் பிரகாசிக்கச் செய்யும் விஷயத்திலாயினும் வேறு ஞானத்தை யபேட்சிப்பதில்லை. ஆதலால் சுயம் பிரகாசன் எனப்படுகிறான். சூரியனும் சந்திரனும் மின்னலும் நெருப்பும் எந்த ஆத்மாவைப் பிரகாசிக்கச் செய்ய மாட்டாவோ, எந்த ஆத்மா பிரகாசித்துக் கொண்டிருத்தலால் அந்த ஆத்மாவை யனுசரித்து சகல பிரபஞ்சமும் பிரகாசிக்கின்றதோ அந்த ஆத்மா எல்லா அவஸ்தைகளிலும் தானே பிரகாசித்துக் கொண்டிருக்கிறான்.

## ஆத்மா ஆனந்த வடிவினன்.

ஆத்மா சுகவடிவினனாகலின் ஆனந்த ரூபத் தன்மை ஆதமலட்சணமாம். பரம (மிகுந்த) பிரீதிக்கு விஷயமாகலின் ஆத்மாவிற்கு சுகவடிவத் தன்மை யுள்ளதென்பது சர்வ சித்தமாம். சகலருக்கும் சுகத்திற்கு ஏதுவாகிய தாரம் தனம் முதலிய பதார்த்தங்களி னிடத்துள்ள பிரியம் அளவுடையதாய் (முடிவுடையதாய்) காணப்படுகின்றது. ஆனால் தன்னிடத்திலோ அளவு கடந்த பிரியம் காணப்படுகின்றது. ஆகையால் ஆத்மா பரமானந்தவடிவினனாம். எவ்வாறெனின்:

மூடவன் குருடன் முதலிய அங்கவீனர்களும் மிக்க வயோதிகரும் பிராணன் நீங்கும் சமயத்தி லுள்ளோரும் இன்னும் ஜீவித்திருக்க வேண்டுமென்று விரும்புவார்களே யன்றி இறந்து போக விரும்புவதில்லை. எவன் எந்த வஸ்துவைச் சம்பாதித்தாலும் தனக்காகவே சம்பாதிக்கிறான். ஆகையால் ஆத்மா எல்லாப் பிராணிகளுக்கும் பரமப் பிரீதிக்கு விஷயமானதாம். தன்னிடத்துள்ள பிரியம் புத்திரன் முதலான பிற பொருள்களிடத்திருப்பதில்லை. ஆதலால் ஆத்மா அதிமுக்கியனானவன். ஆபத்திலாயினும் சம்பத்திலாயினும் எப்படி ஆத்மா பிரியமானவனோ அப்படி மற்றொருவன் பிரியனாகான். தாரம் மக்கள் மித்திரர் கிருகம் தனம் முதலியவற்றைச் சம்பாதிப்பதும் வாணிபம் வேளாண்மை முதலிய தொழில்களைச் செய்வதும் யாருக்காக? தனக்காகவே யன்றோ? ஆகையால் ஆத்மா அதிப்பிரியனல்லவா? எவனும் அனுகூலமென்று ஒரு காரியத்தைச் செய்வதும் பிரதிகூலமென்று செய்யாதொழிதலும் தன்னிமித்தமே யன்றி அன்னியர்க்காக வல்ல. ஆகலின் இந்த ஆத்மாவினும் அதிக பிரியவஸ்து வேறொன்றில்லை.

இதனால் (தன்னிடத்து அதிகாரியம் இருக்கிற தென்று கூறுவதனால்) தான் (ஆத்மா) ஆனந்த சொரூபன் என்றேற்படுகின்றது. இவ்வாறெண்ணாமல் எவன் (மனைவி மக்கள் முதலிய) மற்ற வஸ்துக்களைப் பிரியமானவைகளென் றெண்ணுகிறானோ அவன் அவ்வஸ்துக்களால் சோகத்தையே அனுபவிக்கிறான்.

# பெருஞ் சோற்றுதியஞ் சேரலாதன்.

## (சாமி. சிதம்பரனார் எழுதுவது)

பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும் நாட்டுப் பிரிவினை காரணமாகப் போர் நடந்த காலத்தில், தமிழ் நாட்டில் சேர நாட்டை உதியஞ் சேரலாதன் என்பவன் ஆண்டு கொண்டிருந்தான். அவன், பாண்டவர்களுடைய சேனைகளுக்கும், கௌரவர்களுடைய சேனைகளுக்கும், உணவு கொடுத்தான். ஆகையால், அவனுக்குச் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் என்ற பெயர் வழங்குவதாயிற்று. இவனைப்பற்றி முரஞ்சியூர் முடிநாகராயர் என்பவர் ஒரு பாடல் பாடியிருக்கின்றார். அப்பாடல் புறநானூறென்னும் தமிழ் நூலில் இரண்டாவது பாடலாக இருக்கின்றது. அப்பாடலைக்கொண்டு இவனுடைய சிறந்த பெருமைகளை நன்கறியலாம்.

இம்மன்னவன், தன் பகைவர்கள் எத்துணைக் கொடிய துன்பங்களைச் செய்பினும், அவர்களை யழிப்பதற்குரிய சமயம் வரும் வரையிலும் பொறுத்துக் கொண்டிருப்பான். இவனுடைய பொறுமை பூமியைப் போன்றதாகும். எந்தச் செயலைச் செய்யத் தொடங்கினும், அதிலுள்ள நன்மை தீமைகளை ஆராய்ந்தறிந்த பின்னரே செய்யத் தொடங்குவான். பரந்த அறிவுடையவன். இவனுடைய அறிவின் மிகுதிக்கு உதாரணமாக வானத்தைத்தான் கூறலாம். இவன் மிகுந்த மன வலிமையும் உடல் வலிமையும் உள்ளவன். அவ்வலிமைக்குக் காற்றை உவமானமாக உரைக்கலாம். தன்னோடு எதிர்த்துச் சண்டை செய்யும் பகைவர்களை ஒரு நொடியில் அழிக்குந் திறமை யுடையவன். அவ்வகையில் இவனை நெருப்பிற்கு ஒத்தவன் என்று கூறலாம். மற்றும் யாரிடத்தும் இரக்கங்காட்டி அவர்களுக்கான நலங்களைப் புரியும் குணமுடையவன். இவனுடைய தண்ணளிக்குத் தண்ணீரையே உவமையாகக் கூறலாம். இவன் சோழ நாட்டையுந் தனதாட்சிக்குட்படுத்தி யாண்டு வந்தான். இவனுடைய நாட்டில் எப்பொழுதும் செல்வவளம் குறைவதில்லை. மேலும் மேலும் புதிய வருவாய்கள் வந்து கொண்டே யிருக்கும்.

இம்மன்னவனுடைய மந்திரிமார்கள், நட்பினார்கள் முதலிய சுற்றத்தார்கள், பால் புளிப்படைந்தாலும், சூரியன் இருண்டாலும், நால்வகையான மறைகளிற் கூறப்படும் உண்மையான ஒழுக்க நெறிகள் மாறுபட்டாலும், ஒரு சிறிதும் மாறுபடாத குணத்தை யுடையவர்கள்; இவர்கள் எப்பொழுதும் மன்னவனுடைய நன்மையிலேயே கண்ணுங் கருத்துமாக இருப்பார்கள். இத்தகைய சிறப்புவாய்ந்த மன்னர்களைப் பற்றிய மற்றைய வரலாறுகள் ஒன்றும் அறியக் கூடவில்லை.

இவன்மீது முரஞ்சியூர் முடிநாகராயர் என்பவரால் பாடப்பட்ட பாட்டின் பொருளையும், அப்பாடலையும் படித்துணர்வதனால் இவன் வரலாற்றை யுணரலாம்.

சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனைப் பற்றிய பாடலின் பொருள்:—

அணுக்கள் நிறைந்த நிலமும், அந்நிலத்தின் மேற்புறமாகிய வானமும், வானத்தில் வீசிக்கொண்டிருக்கின்ற காற்றும், அக்காற்றுடன் நட்புடைய நெருப்பும், அந்நெருப்புடன் மாறுபட்ட நீரும் ஆகிய ஐவகைப்பட்ட பெரிய

இயற்கைப் பொருள்களின் தன்மைகளைப்போல, பகைவர்கள் குற்றஞ் செய்தால் அக்குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுதலும், எவற்றையும் ஆராயத்தக்க மிகுந்த அறிவும், உடல்வலிமை மனவலிமைகளும், பகைத்துப் போர் செய்யவந்த பகைவரை அழிக்குந் திறமையும், தம்மை விரும்புவோரைக் காப்பாற்றும் தண்ணளியும் உடையவனே ! உனது ஆட்சிக்குட்பட்ட கீழ் கடலில் எழுந்த சூரியன், மீண்டும் நினது ஆட்சிக்குட்பட்ட வெண்மையாகிய அலைகளையுடைய பல நீர் கலந்ததாகிய மேற்கடலிலேயே மறையும்படியானதும், புதிய வருவாய்களை யுடையதும் ஆகிய நல்ல நாட்டிற்குத் தலைவனே! வான வரம்பன் என்னும் பெயருடையவனே! பெருமையுடையவனே! நீ அசைகின்ற பிடரிமயிருள்ள குதிரைகளையுடைய பாண்டவர்கள் ஐவருடன் சினந்து, நாட்டைத் தமதாக்கிக்கொண்ட அழகிய பொலிவு பெற்ற தும்பை மலர்மாலை யணிந்த கௌரவர்கள் நூற்றுவரும் சண்டைசெய்து அதனால் அக்கூட்டத்தார் போர்க்களத்தில் இறக்கும் வரையிலும், அவ்விருவர் படைகளுக்கும், மிகுந்த சோறாகிய நல்ல உணவைக் கணக்கில்லாமற் கொடுத்தவனே ! பால் புளிப்படைந்தாலும் சூரியன் இருண்டாலும், நான்கு மறைகளிலும் கூறப்பட்ட உண்மை வழிகள் மாறுபட்டாலும், ஒரு சிறிதும் வேறுபடாத துணைவர்களுடன் எப்பொழுதும் நீண்ட நாட்கள் புகழுடன் அழிவில்லாமல் வாழ்வாயாக ! பாறைகளில், சிறிய தலையையுடைய கன்றுகளுடன் பெரிய கண்களையுடைய பெண்மான்கள், அந்திக் காலத்தில் பிராமணர்கள் தங்களுக்குரிய அரிய கடமையைச் செய்யும் மூன்று தீயாகிய விளக்கில் தூங்கிக்கொண்டிருக்கும். அழகிய சிகரங்களையுடைய இமயமலையைப் போலும், பொதியமலையைப் போலவும் நிலைத்து வாழ்வாயாக. மேற்கூறிய பொருளையுடைய பாடல் வருமாறு.

மண்திணிந்த நிலனும்,
நிலன் ஏந்திய விசும்பும்,
விசும்பு தைவரு வளியும்,
வளித்தலைஇய தீயும்
தீ முரணிய நீரும் என்று ஆங்கு
ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்,
போற்றார்ப் பொறுத்தலும், ஆழ்ச்சியது அகலமும்.
வலியும், தெறலும், அளியும் உடையோய் !
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும் நின்
வெண்தலைப் புணரிக் குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நல்நாட்டுப் பொரும !
வானவரம்பனை ! நீயோ ! பெரும !
அலங்கு உளைப்புரவி ஐவரொடு சினைஇ
நிலம் தலைக் கொண்ட பொலம்பூம் தும்பை
ஈர்ஐம் பதின்மரும் பொருது களத்து ஒழியப்
பெரும்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய் !
பாஅல் புளிப்பினும், பகல் இருளினும்,
நாஅல் வேதம் நிலைதிரியினும்,
திரியாச் சுற்றமொடு முழுது சேண்விளங்கி
நடுக்கின்றி நிலியர் (ஓ அத்தை) அடுக்கத்துச்

சிறுதலை நவ்விப் பெரும்கண் மாப்பிணை,
அந்தி, அந்தணர் அரும் கடன் இறுக்கும்
முத்தீ விளக்கில் துஞ்சும்
பொற்கோட்டு இமையமும் பொதியமும் போன்றே

## விளக்கவுரை.

பொறுக்குந் தன்மை நிலத்திற்குரியது. அளவுகடந்த விரிவானது வானம். காற்று வலிமையுள்ளது. தீ எதனையும் அழிக்குந் தன்மையுடையது. குளிர்ந்த தன்மையுடையது நீர்.

திணிந்த—நிறைந்த, தைவரு—தடவி வருகின்ற அதாவது வீசுகின்ற, வளி—காற்று, தலைஇய—கலந்த. தலைஇய என்பதில் ஐகாரம் அளபெடுத்தது, உயிரளபெடை, முரணிய—மாறுபட்ட, போற்றார்—பகைவர், சூழ்ச்சி-ஆராய்ந்து அறிதல்; தெறல்—அழித்தல். அளி—இரக்கம்; வெண்தலைப் புணரிக்குடகடல்-வெண்மையான அலையையுடைய பலநீர்கள் கலந்ததாகிய மேற்குச் சமுத்திரத்தில். யாணர்வைப்பு — புதிய வருவாய்களையுடைய இடம். நீயோ என்பதில் ஓ அசை; உளை—பிடரிமயிர்; சினைஇ—கோபித்து; தலைக்கொண்ட—முழுவதையும் தமதாக்கிக்கொண்ட. பதம்—உணவு. சுற்றம்—அமைச்சர், நண்பர் முதலியவர்கள். சேண்—நீண்ட நாட்கள். நடுக்கின்றி—அழிவில்லாமல். ஓ, அத்தை, இரண்டும் அசைச்சொற்கள். நவ்வி-மான்கன்று. மாப்பிணை—பெண்மான். இறுக்கும்—செய்யும். முத்தீ—ஆகவனீயம், காருகபத்தியம் தெட்சணுக்கினி என்பன. துஞ்சும்—தூங்கும்.

## ஊன்றிப் பார்த்தல்.

எப்பொருளை நோக்கினும் அதை நாம் ஊன்றி நோக்கல் வேண்டும். இல்லையேல் அப்பொருளின் அருமையை நாம் அறிய இயலாது. இவ்வுயர்ந்த வழக்கம் நம்மவரில் பெரும்பாலோர்க்கில்லை. இவ்வழக்கத்தை இளமை முதற்கொண்டே பழக்கம் செய்து வரல் வேண்டும். தாம் காணும் ஒவ்வொரு பொருளினிடத்தும் தம் முழுகவனத்தையும் செலுத்தி அவற்றின் மர்மங்களை அறிந்துகொண்டவர்களே இவ்வுலகில் சிறந்து வாழ்கிறார்கள். தாவர சாஸ்திர ஆராய்ச்சியில் உலகில் தற்போது தலைசிறந்து விளங்கும் சர். ஜே. சி போஸ் அவர்களே இதற்குத் தக்க சான்றாவர். நிற்க, ஊன்றிப் பாராத காரணத்தால் ஓந்தியின் நிறத்தைப்பற்றி இரண்டு சிநேகிதர்களுக்குள் சண்டை ஏற்பட்டுப் பின் அவ்வழியே வந்த தத்துவ சாஸ்திரி ஒருவனின்மூலம் ஓந்தியின் நிறம் அடிக்கடி மாறும் என்ற உண்மையை அவர்கள் உணர்ந்துகொண்டதாய் ஒரு கதையுண்டு. ஆதலால் நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொருளையும் ஊன்றிப்பார்த்து விஷயங்களை அறிந்து உயர்வை அடைவோமாக. A. S.




(302-ம் பக்கத் தொடர்ச்சி)

(உறையூர். ஸ்ரீ. வே வரதராஜய்யங்கார் எழுதியது.)

### சணல் நார்.

இது தென்னைநாருக்கு அடுத்தபடி உறுதியும் நயமும் உடையது; இதனால் சாக்குகயிறு செய்யப்படுகின்றன. இதன் செடி அதிக நாருடையது; இந்தியாவின் எல்லாப்பாகங்களிலும் பயிராகின்றது. சணல் வியாபாரிகள் சாக்கு நெய்வதற்கேற்ற சணற்செடிகளை உற்பத்திசெய்து ஆண்டுதோறும் இலட்சக்கணக்காகப் பொருளீட்டுகிறார்கள். இது உலகத்தின் எல்லா தேசத்தாருக்கும் இன்றியமையாத வியாபாரப்பண்டமாகும். ஓர் தனி யந்திரசாலை (Mill) ஏற்பட்டு, இக்கைத்தொழிலை விருத்தி செய்வதினின்றும் இதன் முதன்மை நன்கு புலனாம்.

### வாழை நார்.

வாழைநார் உற்பத்தி ஏராளமாகச் செய்யலாம். பார்வைக்கும் நீட்சிக்கும் மிருதுத்தன்மைக்கும் இது பேர்போனதானாலும், ஒருமுறை தண்ணீரில் ஊறவைத்து எடுத்துக் காயவைத்தபின் இது பலமிழந்துவிடுகிறது. மடக்கினாலும், சற்று பலமாக இழுத்தாலும் இடையிடையே ஒடிந்தும் அறுந்தும் போய்விடும். தொழிலாளர்கள் எவ்வளவோ பாடுபட்டுப்பார்த்தும், யுக்திக்குச் சாத்தியமான ரசாயன முறைகளைக் கையாண்டும் இதனிடமுள்ள மேற்கூறிய தன்மைகளைப் போக்கி உறுதியூட்ட முடியாமற் கைவிட்டுவிட்டார்கள். வெகுசமீபத்தில், கடைகளில் விற்கப்படும் நூதனமான பட்டுகள் வாழை நார்க்கலப்புடையனவென்று பொதுஜனங்களால் கருதப்படுவதற்கும் அக்கூற்றை நம்புவதற்கும் எவ்வித ஆதாரமுமில்லை. இது பொய்க்கூற்றேயாகும். வாழைநார் பூத்தொடுத்தல், புலசரக்குப் பண்டங்களைப் பொட்டணங் கட்டுதல் முதலியவற்றிற்கே உபயோகமாகுமன்றி வேறு எவ்வித பயனுமுடையதல்லவென்பது அறியத்தக்கது.

### வின்னாண் சணல் நார் (Bowstring Hemp)

இது கற்றாழை வகைகளி லொன்று. ஆனால் இதை ஜனங்கள் தவறாக சணல் வர்க்கத்தைச் சேர்ந்ததென் றியம்புவார்கள். அஃதெப்படியானாலும் இச்செடியில் விளையும் நார் சணலைப்போன்றே இருக்கும்; நல்ல தூய வெண்மைநிறமும் இதற்குண்டு. மேலும், இதுவே எல்லா நார் வகைகளிலும் மிக்க உறுதியானது. இச்செடிகள் அநேகமாகப் பழத்தோட்டங்களிலும், அலங்கார ரூபமான பூந்தொட்டிகளிலும், ஏராளமாகப் பெருங்காடுகளிலும் காணப்படும். சலாகை போன்ற இதன் கூர்மையான இலைகள் கற்றாழை இலையை ஒத்திருக்கின்றனவாயினும் இதில் முட்கள் இல்லை. கற்றாழையைவிட மிருதுவாயு மிருக்கும். முற்கூறிய வேக்காட்டு முறைப்படியே இதிலிருந்து நார் உற்பத்தி செய்யலாம். மிக்க உறுதியுடையதா யிருத்தல் பற்றியே இதற்கு "வில் நாண்சணல்" என்ற காரணப்பெயர் ஏற்பட்டிருக்கிறது.

## அலீயின் அமுதவாக்கு.

(K. அல்லா பிச்சை.)

அயலாருக்குத் தீங்கிழைக்கக் கருதுவோன் முதலாவது தனக்கே தீங்கிழைக்கின்றான்.

தனது சகோதரரின் அற்பப் பிழைகளைக் கணக்கிடுவோன் நண்பரின் தொகையைக் குறைக்கின்றான்.

கலகத்தீயை மூட்டுவோன் அதற்கே எரிகொள்ளியாகி இறந்தொழிகின்றான்.

வாரிஸ்களின் நலன்கருதிப் பொருள்விட்டுச் செல்லுதலினும் சான்றோன் என்னும் நாமமே சாலச் சிறந்ததாம்.

உண்டி நினைந்து வருந்துதல் ஒழிக; அஃது உன்னைத் தேடித் திரிகின்றது.

பட்டுப்போலும் ஸ்பரிச உணர்ச்சிதரும் உடம்பினதாயினும் வாய்நிரம்பிய விஷமுள்ள சர்ப்பம் போன்றது இவ்வுலகம். அறிவீனர் இதன்மீது ஆசைகொண்டு தீண்டப்பெறுவர். அறிஞர் அதினின்றும் விலகுவர்.

கைம்மாறு கருதி இறைவனை வணங்குபவர் ஒருசாரார்; இது வாணிபமாம். தண்டனைக்கஞ்சி வணங்குபவர் மற்றொரு வகுப்பார்; இது அடிமை வணக்கமாம். நன்றிசெலுத்தும் பொருட்டு வழிபடும் மூன்றாம் வகுப்பினரும் உளர்; இதுவே சுதந்தரபுருடரது வழிபாடாகும்.

நீ பாவஞ்செய்யாத ஒவ்வொருநாளும் திருநாளாகும்.

இறைவனை அஞ்சுவோன் எவரையும் அஞ்சான்.

உனது பாவத்தையன்றி வேறு எதனையும் அஞ்சற்க; எல்லாம்வல்ல இறைவனையன்றி வேறு எவரையும் நம்பற்க.

எளியார்க்கு ஏதேனும் ஈதல் இயலாதெனின், அன்பேனும் காட்டி அவரை ஆதரிக்க.

சுயவுரிமைமறந்து பிறருரிமை மறவாதிருத்தலே ஒருவனது கடமையாம்.

இரவாதளித்தலே ஈகை யெனப்படும்; இரப்பார்க்கீதல் பிறர் நிந்தனை அஞ்சிய ஒழுக்கமாம்.

பிறர் குற்றம் மறத்தலே பெரியோர் பெருமை.

உள்ளும் புறமும் ஒன்றாயிருப்பவன் ஒருவருக்கும் அஞ்சான். தீய உள்ளமுடையான் ஒருகாலும் சுகம் பெறுதலில்லை.

தனது குற்றங் குறைகளை மன்னிக்க வேண்டுவோனை க்ஷமித்துவிடுக; ஏனெனின், அதன்காரணமாக இறைவன் அளிக்கும் வெகுமதி மிகவும் சிறந்தது.

பழிவாங்கும் வன்மை அடைந்தகாலத்து அவ்வன்மையளித்த ஆண்டவனுக்கு நன்றி செலுத்து முகமாக உனது பகைவனை மன்னித்துவிடுக.

மன்னித்தல் என்பது விரோதியின்மீது ஜயம் பெறுவதாகும்.

உற்றாரை உதாசினஞ் செய்யும் ஒருவன் அயலார்மாட்டு அன்பு செலுத்துதல் அசாத்தியம்.

---

# உடற்பயிற்சியும் சுகாதாரமும்.

(கா. சி. சிவசங்கர முதலியார்.)

## கோச்சகப்பா.

அறந்தழைக்கு நிலவுலகி லாயசிறு குழவிகளும்
பிறந்தநாள் முதலாகப் பிரியமுடன் கைகாலை
உரம்பெறவே யாட்டுகின்ற வுண்மைதனை நோக்குவமேல்
சிறந்தபய னுடற்பயிற்சி செய்யுமென வறிவோமே. (1)

இளங்கன்று பிறந்தவுட னெழுந்தோடி விளையாடி
யுளம்பெற்ற மகிழ்ச்சியுட னுடற்பயிற்சி செய்வதினால்
வளம்பெற்று நாடோறும் வளருவதைக் காண்போமேல்
விளங்குமுடற் பயிற்சிநிதம் வேண்டுமென வுணர்வோமே. (2)

சடற்கரைசூழ் நிலவுலகிற் காணுமுயிர்க் கூட்டமெல்லாம்
உடற்பயிற்சி செய்வதினா லுறுப்புரனை யடைவதலால்
குடற்குரனு முண்டாகிக் கொண்டவுண விரத்தமதாம்
இடர்ப்பாடொன் றிலதாகு மெழிலுமிக வுளதாமே. ( 3)

செப்பரிய வுடற்பயிற்சி செய்யாதார் மெய்த்தொகுதி
யுப்பிருந்த பாண்டமென வுளுத்துவிடு மல்லாமல்
வெப்பகன்ற நார்த்தசைகள் வெறும்பஞ்சை யொப்பாகி
இப்புவியி னடைப்பிணமா யின்பமென்ப தறியாரே. (4)

கண்டீரோ நண்பர்களே கருவடைந்து பிள்ளைப்பே
றுண்டாகா திருப்பதுவு முண்டாகின் பெறமுடியாச்
சண்டாள நோயுறலுஞ் சற்றுமுடற் பயிற்சியிலாப்
பெண்டீர்க்கே பாடுபடும் பேதையர்க்குக் குறையிலையே. (5)

பெற்றோரே யிளமையினும் பிள்ளைகளைப் பலகலைகள்
கற்றோத வைப்பதுபோற் காலையுடற் பயிற்சியையுஞ்
சொற்றோத வைப்பீரேல் சுகமான வாழ்வுறுவார்
எற்றோமற் றக்கல்வி யிளைத்தபிணி யாளருக்கே. (6)

## அறுசீர் விருத்தம்.

வயிறு பருத்தே யுடற்கூனி வடிவஞ் சிறுத்து வாழ்நாளிற்
றுயரம் பெறவோ விவ்வுலகிற் றோன்றி வளர்த லம்மம்மா!
வயிரம் பெற்ற வுடம்போடே மனதின் றிடமும் பெற்றார்க்கே
உயரும் செயலுங் கைகூடும் ஒப்பில் லாத புகழாமே. (7)

முதிர்ந்த பருவ முடையார்க்கு முக்ய மாகு முடற்பயிற்சி
அதிர வுழைத்து வருந்தாம லான வரையி னடப்பதுவுந்
துதிகொள் கோவில் சுற்றுவதும் தோட்ட வேலை செய்வதுவும்
விதியில் வீட்டு வேலையெலாம் விரும்பிச் செயலுந் தகுந்தவையே. ()

தூய காற்றை நல்லுணவைச் சுத்த நீரை யுட்கொளலும்
சேய முடனே வுடற்பயிற்சி நித்த மியற்றிக் குளிப்பதுவும்
ஆய வுறக்கஞ் செய்வதுவு மாடை வெளுத்துக் கட்டுவதுந்
தீய பிணியை நீக்கியுரன் செய்யு மினிய நட்பாமே. (9)

ஐந்தை யடக்கிப் பொறுமையுட னுண்டா னடியைப் பணிவதுவும்
விந்தை யொழுக்கிப் போக்காமல் மின்னார் கலவி விரும்பாமல்
மைந்தர் பெறுமோர் வாழ்விற்கே மணஞ்செய் கின்ற மாதவர்கள்
சிந்தை மகிழ நூறாண்டு சீவித் திருப்ப ருலகினிலே. (10)

# அநுமானப் பேய்.

பண்டிதர். L. இராமசாமி நாயுடு.

—அண்ணி! பார்த்தீர்களா பெண்களுக்கு எவ்வளவு சாகசம்?

—ஆச்சரியமென்ன துரைசாமி? காதலின் மகிமையே அப்படிப்பட்டது. அது எப்பேர்ப்பட்ட காரியத்தையும் செய்யச் செய்துவிடும்.

துரைசாமி மந்தஹாசம் புரிந்தான். முத்தம்மாள் கடைக்கண்ணால் பார்த்தாள்.

அப்பொழுதுதான் வீட்டிற்குள் காலடிவைத்த ராமலிங்கம்பிள்ளை காதில் அந்த வார்த்தைகள் விழுந்தன. தம்பி கட்டிலின்மீது படுத்துக்கொண்டு நாவல் படிப்பதாவது தமது மனைவி அவன் பக்கத்தில் உட்கார்ந்து கேட்டுக்



கொண்டிருப்பதாவது அவருக்குப் புதிதல்ல. ஆனால் அவளுடைய வாயிலிருந்து வந்த வார்த்தைகள், அந்த கடைக்கண் பார்வை, தம்பி முகத்தில் தவழ்ந்த மந்தஹாஸ தேஜஸ்—அவருடைய மனதில் அபார கஷ்டத்தை உண்

டாக்கினதோடு அநுமானப்பேய் குடிகொள்ளும்படியாகவும் தாண்டிவிட்டன. தூக்கில் போடப்போன அங்கவஸ்திரத்தை மறுபடியும் தோளில் போட்டுக்கொண்டு வீதிவாசற்பக்கம் திரும்பினார்.

முத்தம்மாள் தொந்தாவுடன் எழுந்து,

—பலகாரம் சாப்பிடவில்லையா? என்றாள்.

—சாப்பிடாமல் என்ன? மறுபடியும் வருகிறேன் என்று ராமலிங்கம் பிள்ளை புறப்பட்டுப் போனார். துரைசாமி கட்டிலினின்றும் எழுந்து படித்துக்கொண்டிருந்த நாவலை மூடிவைத்துவிட்டு சுவரில் மாட்டியிருந்த "டென்னிஸ் பேட்" டை எடுத்துக்கொண்டு,

—அண்ணி! பந்து விளையாட நேரமாயிற்று; போய்விட்டு வருகிறேன் என்று வீட்டைவிட்டுப் புறப்பட்டான்.

முத்தம்மாள் மனது பற்பலவிதமாகப் போகத் தொடங்கிற்று. கணவன் முகம் களைகெட்டுப்போயிருந்ததை அவள் பார்த்தது அந்த நாளே. வீட்டுக்கு வந்தவுடனே சிரித்துக்கொண்டு பேசுதல், பேர்சொல்லிக் கூப்பிடுதல், கேலிசெய்தல் ஒன்றும் இன்றைக்குக் காணப்படவில்லை—"சேவகா விருத்தி மிக ஈனமானது. மேலதிகாரிகள் ஏதேனும் சொன்னார்களோ? அல்லது அவருடைய உயிர் நண்பர்களுள் யாருக்கேனும் கஷ்டமோ என்று என்னென்னமோ எண்ணிக்கொண்டு குழப்பமடைந்திருந்தாளே யொழிய ஒரு முடிவுக்கும் அவளால் வரக்கூடவில்லை.

ராமலிங்கம் பிள்ளைக்கு திருநெல்வேலி தாலூகா கச்சேரியில் வேலை. மாதம் ஐம்பது ரூபா சம்பளம். துரைசாமி அவருடைய சிறிய தகப்பனார் மகன். அவர்களுக்கு பூஸ்திதி மிகவும் குறைவு. மேல்வரும்படி இல்லை. துரைசாமி ஆதியிலிருந்து அண்ணனுடைய சகாயத்தினாலே படித்துக்கொண்டு வருகிறான். தற்காலம் ஹிந்து கல்லூரியில் பி. ஏ. வகுப்பில் படித்துக்கொண்டிருக்கிறான். முதலில் கொஞ்சகாலம் ஹாஸ்டலிலேயே இருந்தவன். அண்ணன் இந்த ஊருக்கு மாற்றப்பட்டு இங்கே குடிவந்த நாள்முதல் வீட்டிலேயே இருந்துவருகிறான். நிலபலாதிகள் குறைவாயிருந்தமையாலும் வேண்டியவர்கள் எல்லாரும் சிறுவயதாயிருக்கும்போதே காலஞ்சென்றமையாலும் ராமலிங்கம் பிள்ளை உத்தியோகத்தில் பிரவேசிக்கிறவரைக்கும் கலியாணம் ஆகவில்லை. துரைசாமிக்கு இன்னும் விவாகம் நடக்கவில்லை. முத்தம்மாள் குடும்ப நிர்வாகத்துக்குவந்து சில மாதங்களே ஆயின. இவளுடைய தாய்வீடு ஸ்ரீ வில்லிபுத்தூர். அவ்விடத்திய முனிசிபல் பெண்பாடசாலையில் ஆறும்வகுப்புவரை வாசித்தவள். தற்கால நாகரிகப் போக்குள்ள பெண்களைப்போலவே இவளுக்கும் நாவல் பைத்தியம் உண்டு. ஆதலால் துரைசாமி அண்ணிக்கு வேண்டிய புஸ்தகங்களை நண்பர்களிடமிருந்தோ புத்தகநிலையங்களிலிருந்தோ வாங்கிக் கொடுத்துக்கொண்டிருப்பான். இதுமாத்திரமல்ல; அவளுக்கு விநோதமாகவும் ரசமாகவும் இருக்கும்படி இவனே படித்துக் கேட்கச் செய்வதும் உண்டு. தானே படிப்பதைக் காட்டிலும் முத்தம்மாளுக்கு கொழுந்தன் படித்துச் சொல்வதில் ஒருவிதமான ஸ்வாரஸ்யம் தோன்றும் விஷயம் மாத்திரம் உண்மை.

இல்லறவாழ்க்கையில் இன்பத்துக்கு மூலாதாரம் பரஸ்பரம் ஆழ்ந்த காதல். இத்தகைய காதலர்களுக்குள் யார் அணுவளவு நழுவினாலும் குடும்ப வாழ்வில் சுகம் என்ற பேச்சு இல்லை.

ராமலிங்கம் பிள்ளை நேராகத் தாம்பிரபரணி நதிக்கரைக்குப் போய் அங்கேயிருந்த படிகளில் தனிமையாக உட்கார்ந்து ஆலோசிக்கத் தொடங்கினார்—ஆஹா! பெண்களின் இருதய ஆழத்தைக் காணமுடியாதல்லவா? முத்தம்மா! நீ என்னை மனப்பூர்வமாகக் காதலிக்கிறாய் என்று ஆனந்தசாகரத்தில் மூழ்கியிருந்தேனே! எவ்வளவு வேலை செய்துவிட்டாய்? உனது புன்சிரிப்பு, அந்த உற்சாகபாவனைகள்-எல்லாம் பகட்டுத்தானா? "மங்கையர் பொருட்டாலெய்தும் மாந்தர்க்கு மரணம்" என்ற கம்பன் வாக்கில் எவ்வளவு உண்மையிருக்கிறது! துரைசாமியா இப்பேர்ப்பட்ட காரியத்துக்குத் துணிந்துவிட்டான்! துரைசாமி நீ என்னை தெய்வமாகப் பாவிக்கிறாய் என்று மகிழ்ந்து போனேனே! அண்ணியும் கொழுந்தனும் அல்லவா? அவர்களுக்குள் பரிகாசம் சகஜமே! இதற்காக என்ன்னத எண்ணமெல்லாம் எண்ணி அநுமானம் செய்வானேன்? பெரிய பெருமூச்செறிந்து - அநுமானமே அல்ல. உண்மை. மூக்காலும் உண்மை. அந்தப் பார்வைகள் காதல் சூசனைகளாகும். அப்பார்வைகளில் ரகஸியார்த்தம் நிறைந்திருக்கிறது. இதுவரைக்கும் அவர்கள் குற்றமற்றவர்களாயிருந்தாலும் இப்போது இருக்றது என்று அவர்களுடைய பார்வைகள், அவர்களுடைய சிரிப்புகள் வெளிப்படுத்துகின்றன—என்னை நானே தூஷித்துக் கொள்ளமாட்டேன்; இல்லாவிட்டாலும் இவ்வளவு பிரியம் இவர்களுக்குள் யார் வைத்துக்கொள்ளச் சொன்னார்கள்?



சூரியன் மறைந்தான். மெல்ல மெல்ல இருளும் பரந்து கவிந்தது. ராமலிங்கம் பிள்ளையின் உள்ளம் குழப்பத்தால் தத்தளித்துக்கொண்டிருந்தது. ஒன்றும் செய்யத் தோன்றவில்லை.

"நான் இப்போது என்ன செய்யவேண்டும்". (இந்த ஆலோசனையில் அவரது முகம் நிமிஷத்துக்கு நிமிஷம் சிவக்கும் வாடும்.) மறுபடியும் ஒரு தரம் "அப்பனே" என்று நீண்ட பெருமூச்சு வந்தது. அவரது மனோரங்கத்தில் கோபம், ஆத்திரம், துக்கம், அருவருப்பு சந்தாபம் முதலியவை ஒன்றுக்

கொன்று கலகம் செய்துகொண்டிருந்தன. அவ்வளவும் முகத்தில் பிரதி பலித்தன. மனைவியை அநுமானித்த அவரது மனவேதனையை நாம் தெளி வாய்த் தெரிந்துகொள்ள முடியாது. வீட்டு "குட்டு" வெளிவரக்கூடாது என்ற கவலை ஒருபக்கம் துளைத்தது. இந்தமட்டில் வெளியானாலும் ஊருக் குள் பெரிய "குபார்" கிளம்பிவிடும் என்று நினைத்தார். "சரி! தம்பியி னிடம்—வீட்டில் உனக்குப் படிப்பு நன்றாக ஓடாது. பரீக்ஷைகள் நெருங்கி விட்டன. நீ போய் ஹாஸ்டலில் இரு" என்று சொல்லலாம். எனது வார்த்தை தட்டமாட்டான். இந்த நிலைமையில் எனக்கு உண்மை நன்கு புலப்படவில்லை. இப்படிச் செய்தால் இவர்களுடைய லட்சணங்களை இன் னும் பரீக்ஷிப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கும். திடீரென்று ஒன்றும் செய்துவிடக்கூடாதல்லவா" என்று தீர்மானித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தார்.

* * * *

தாமும் தம்பியும் சாப்பாட்டுக்கு உட்கார்ந்தார்கள். மனைவியோடு ஒன் றும் பேசவில்லை. அவளும் காரணம் ஏதும் தெரிந்துக் கொள்ளமுடியாமல் சங்கை செய்துகொண்டே மெதுவாகப் பரிமாறிக்கொண்டிருந்தாள். அப் போது ராமலிங்கம்பிள்ளை தம்பியைப் பார்த்து,

'துரைசாமி! பரீக்ஷைக்குப் பணம் கட்டிவிட்டாயல்லவா? இன்னும் உங்கள் பரீக்ஷை எவ்வளவு நாட்கள் இருக்கின்றன?'

'பூர்த்தியாக மூன்று மாதங்களில்லை.'

'சமீபித்துவிட்டதே. எனக்கு ஒன்று தோன்றுகிறது. உனக்கு இங்கே படிப்பு ஓடாது. அதுவுமல்லாமல் ஹாஸ்டலில் இருக்கிற மாணவர்களோடு கலந்து வாசிக்கலாம். எதோ கொஞ்சம் சிரத்தையாகப் பாடுபட்டால் இந்த வருஷம் நெருக்கிவிடலாம். நம்முடைய கஷ்டங்களும் கரையேறும்'

'நானும் அங்குபோய் பையன்களோடு கலந்து வாசிப்பதுதான் நலம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறேன்.'

'அங்கும் இங்கும் திரிகிற காலம் வீணாகப்போகும். ஹாஸ்டலிலேயே ஏன் இருக்கக்கூடாது?'

'அடே அப்பா! அவ்வளவு அவசரமில்லை'

'வேறு ஒன்றும் சொல்லாதே. இதென்ன விளையாட்டா? உனக்கு வேண்டியவைகளை நான் பொறுத்துக்கொள்ளுகிறேன். உனது பந்து விளை யாட்டுகளைக் கொஞ்சம் நிறுத்திவிட்டு அங்கேயே இருந்து கெட்டியாகப் படி'

'நாளைக்கே உனது புஸ்தகங்களை எல்லாம் எடுத்துக்கொண்டு ஹாஸ்ட லில் போய் இரு.'

துரைசாமி பதில் பேசவில்லை. மறுநாளே அவன் தனது பெட்டி புஸ்த கங்களோடு ஹாஸ்டலுக்குப் போனான்.

இரண்டுநாட்கள் கழிந்தன. காந்தனுடைய கோபம் சிறிதாவது சாந்த மடையவில்லை. சாயங்காலம் வீட்டுக்குப் பலகாரத்துக்கு வருவதுகூட ராம லிங்கம்பிள்ளை நிறுத்திவிட்டார். மானவதியான ஸ்திரீ கொழுநன் அடித் தாலும் வைதாலும் பொறுத்துக்கொள்வாளே யொழிய பதியின் கோணலை மாத்திரம் சகித்துக்கொள்ளமாட்டாள்.

இரவு ஒன்பதுமணியாயிற்று. முத்தம்மாள் பர்த்தாவின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு 'எதற்காக இந்தக் கோபம்? நான் என்ன தப்புச் செய்தேன்?'

"......................"

'ஏன் மௌனமா யிருக்கிறீர்கள்? என்பேரில் இவ்வளவு பிடிப்பாக இருப்பானேன்? நான் செய்த தப்பென்ன?'

'ஆம் உன் தப்பென்ன?'

'ஐயோ! இவ்வளவு கோபத்திற்கு நான் என்ன செய்தேன்? ஏதேனும் தெரியாமல் செய்திருந்தாலும் சொல்லக் கூடாதா? குற்ற மிருந்தாலும் திருத்திக் கொள்வேனே.'

'குற்ற மிருந்தால் திருத்திக் கொள்வாய்! அல்லவா? ஆம் உன்பேரில் குற்ற மென்ன? நீங்களிருவரும் சரசம் செய்வதற்கு என்னுடையதே குற்றம்.'

கணவனுடைய அநுமானத்தின் காரணம் தெரிந்தது. தெரிந்தது மாத்திரமல்ல. அவளுடைய நெஞ்சில் இடிவிழுந்ததுபோல் அவர் சொன்ன வார்த்தை விழுந்தது. அவள் விக்கி விக்கி அழுதுகொண்டே பதியின் பாதங்களின் மீது சாய்ந்து "ஐயோ; எவ்வளவு பெரிய அபவாதத்தைப் போட்டுவிட்டீர்கள்?" அவன் எனது புத்திரனைப் போலே.............."

"சீச்சீ! வாயை மூடு. உன்னுடைய நீலி அழுகைக் கென்ன? நான் என்ன குருடன் என்று நினைத்துக்கொண் டிருக்கிறாயா? உங்கள் பார்வைகளையும், உங்கள் சிரிப்புகளையும் கிரகித்துக்கொள்ளவில்லை என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா? ஸ்திரீகளை விசுவசிக்கிறதே தோஷம்—போ! போ!" என்று காலால் ஒரு தள்ளுத் தள்ளினார். அந்த நிரபராதி செயலற்றுப் போனாள். 'நாயகனுக்கு ஆகாதவளாகப் போய்விட்ட பிறகு எனக்கெதற்கு இந்தப் பிழைப்பு! தாம்பிரபரணியிலாவது விழுந்து பிராணனைப் போக்கிக் கொள்ளுகிறேன்.'

இவள் இல்லறத்துக்கு வந்து கொஞ்ச நாட்களே ஆயின. பர்த்தாவுடன் கூடி அந்யோந்யமாக எவ்வளவோ சுகத்தை அநுபவிக்கலாமென்று ஆசை வைத்துக்கொண்டிருந்தாள். 'உண்மை தெரியாமல் போகாது. காலமானது எனது குற்றமற்ற தன்மையைப் பர்த்தாவுக்கு வெளிப்படுத்தி என்னை அவருடைய கிருபாநோக்கத்திற்குப் பாத்திரமானவளாகச் செய்யும்' என்ற ஆவல் ஒன்று அந்த ஆத்மஹத்தியைத் தடைசெய்துகொண்டிருந்தது.

நாட்கள் இப்படி எத்தனையோ கடந்தன. சனி ஞாயிற்றுக் கிழமைகளில் கொழுந்தன் வந்து போய்க்கொண் டிருந்தான். ஆனால் நாயகனுடைய அநுமானத்தைப் பற்றி அவள் துரைசாமியினிடம் அணுவளவாவது மூச்சு விடவில்லை. "நாவல் ஏதாவது படிக்கட்டுமா?" என்றால் "வேண்டாம். பரீக்ஷைப் படிப்பைப் பாழாக்கிக் கொள்ளாதே" என்றும், இல்லாவிட்டால் "எனக்கு இன்றைக்குத் தலைவலியாயிருக்கிறது, இன்னொரு நாளைக்குப் படித்துக் கொள்ளலாம்" என்றும் முத்தம்மாள் அவனோடு சொல்லி அனுப்பி விடுவதை வழக்கமாக வைத்துக்கொண்டாள்.

அவன் வந்து போய்க்கொண்டிருந்தது ராமலிங்கம் பிள்ளைக்குப் பத்து மடங்கு சந்தேகத்தை அதிகமாக்கிவிட்டது.

கொஞ்சநாள் கழிந்தபிற்பாடு முத்தம்மாளுடைய அண்ணன் கோர்ட்டு அலுவலாக திருநெல்வேலிக்கு வந்திருந்தான். சாப்பாடு முடிந்த பிற்பாடு ராமலிங்கம்பிள்ளை அவனைக் கூப்பிட்டு "மாப்பிள்ளை ! என்னை மறுபடியும் எங்கே மாற்றுவார்களோ தெரியவில்லை. இன்னும் இரண்டு மூன்று நாட்களில் முடிவு தெரியும். உமது தங்கையை ஒருதடவை ஊருக்குக் கூட்டிக்கொண்டு போங்கள். பத்து நாட்கள் அவளுடைய தாயாரிடத்திலும் தம்பிமார்களிடத்திலும் இருந்து விட்டு வரட்டும்" என்றார்

நாராயணபிள்ளை மகிழ்ச்சியோடு "ஆஹா ! அப்படியே ஆகட்டும்" என்றான். முத்தம்மாளுடைய முகத்தில் சந்தோஷமும் இல்லை துக்கமும் இல்லை. எதையோ மறந்தவள்போல அண்ணனோடு பிறந்த அகத்திற்குப் புறப்பட்டாள்.

* * *

முத்தம்மாள் தாய் வீட்டிற்கு வந்து இப்பொழுது ஆறுமாதமாயிற்று. எத்தனையோ கடிதங்கள் எழுதிப்பார்த்தாள். நாயகனிடமிருந்து ஒன்றுக்காவது பதில் கடிதம் வரவில்லை. புருஷன் தன்மீதுள்ள சந்தேகங் காரணமாக மனவேற்றுமை கொண்டிருத்தலை பெற்ற தாயிடத்தில்கூடச் சொல்லவில்லை. தனக்குத்தானே தைரியம் செய்துகொண்டு கணவனிடம் போகத்துணியவுமில்லை. மெல்ல மெல்ல அவள் மனதில் நாயகன்மீது ஒருவித வெறுப்புத் தோன்றிற்று. இப்போது அவளுக்கு அங்கே போகவேண்டும் என்ற எண்ணங்கூட இல்லாமல் போய்விட்டது.

உர் ஒருநாள் ஞாயிற்றுக்கிழமை மறுபடியும் துரைசாமி வீட்டுக்குப் போனான். அண்ணி இல்லை. தமையனார் படுத்துக்கொண்டிருந்தார்.

'அண்ணா ! அண்ணியார் எங்கே ?'

"உனது அண்ணி தாயார் வீட்டுக்குப் போனாள்.'

'உங்களுக்கு ஏதேனும் சகாயம் செய்யட்டுமா ?'

எனக்கு ஒரு சகாயமும் தேவையில்லை. நீ போய் படி. உன் அண்ணி வந்த பிற்பாடு வரலாம். பாவம் ! அவள் வீட்டில் ஒருத்தியாக இருக்கமாட்டாள்.'

துரைசாமிக்குத் தமயனார் வார்த்தைகள் ஒருவிதமா யிருப்பதாகத் தெரிந்ததே யொழிய அவற்றிலுள்ள தொனி அர்த்தத்தை கிரகிக்கக்கூடவில்லை.

நாட்கள் பல கழிந்தன. துரைசாமி பரீக்ஷை முடிந்த பிற்பாடு வீட்டுக்கு வந்தான். அண்ணியார் வரவில்லை. தமையனார் போக்கும் மாறிவிட்டது. தன்னைக் கண்டாலே முகத்தில் அருவருப்புக்குறி காட்டிக்கொண்டிருந்தார். எந்த வேலையும் அவனிடம் சொல்லுவதில்லை. அவனாகச் செய்யப் போனாலும் ஒரே அடியாக மறுத்துவிடுவார். துரைசாமிக்கு ஒன்றும் புலப்படவில்லை. எவ்வளவுதூரம் ஆலோசனை செய்து பார்த்தாலும் அண்ணனுடைய மன மாற்றத்தின் காரணம் அவனுக்கு விளங்கவேயில்லை. ஒருநாள் ராமலிங்கம்பிள்ளை தம்பியை விளித்து "ஊருக்குப்போய் நம்முடைய நிலங்களின் இந்த போகத்துக் குத்தகைத் தொகையை வசூல் செய்து கொண்டுவா. தவணை சொல்லவேண்டாம் செலவிருக்கிறது என்று சொல்" என்றார்.

'சரி அப்படியே ஆகட்டும்' என்று துரைசாமி காலை வண்டியில் புறப்பட்டு வத்தராயிருப்பு சென்று இரண்டுநாள் தங்கி அநேகமாக வசூல் செய்து கொண்டு திரும்பி வரும் போது அண்ணியாருடைய பிறந்த அகத்துக்குப் போனான்.

க்ஷேமாதிசய விசாரணைகள் முடிந்தபிறகு துரைசாமி அண்ணியாரைப் பார்த்து "அண்ணி! இந்தத் தடவை இத்தனை நாள் இருந்து விட்டீர்களே என்? சாப்பாடு முறுக்காக நடக்கிறது போலிருக்கிறது" என்றான்.

முத்தம்மாள் ஒரு பெருமூச்சு விட்டாள். மாய மர்மங்கள் அறியாத துரைசாமிக்கு அவள் என்ன பதில் கொடுப்பாள்?'

'உங்கள் அண்ணா சந்தோஷமாகவே இருக்கிறார்களா?'

'சந்தோஷமாகவே இருக்கிறார்கள். என்ன அண்ணி! நீங்கள் ஏது அப்படியே இருந்து விட்டீர்கள்? மிகுந்த விசாரத்துடனிருக்கிறீர்களே என்? அண்ணா உங்களை ஏதேனும் சொன்னார்களா? நீங்கள் எப்பொழுதும் பிறந்த வீட்டில் இத்தனை நாட்கள் இருந்ததில்லையே! அண்ணாவும் உங்களை விட்டு விட்டு............'

'என்ன சொல்வேன் துரைசாமி' என்று முத்தம்மாள் பெரிய சத்தம் போட்டு அழுதாள். துரைசாமி கண்களில் நீர் ததும்பிற்று. தாழ்ந்த குரலில் ——'அண்ணி! என்ன அது?'

'துரைசாமி! என்னென்று சொல்லட்டும்? உன்னுடைய அண்ணா...... ......நம்மிருவரையும்...........சந்தேகிக்கிறார்.'

'ஐயோ கடவுளே!'

என்று கண்ணீர் வெள்ளம் பெருக துரைசாமி சுவரில் சாய்ந்து விட்டான். தான் கட்டிலில் படுத்துக்கொண்டு நாவல் வாசித்தது, அண்ணியோடு சமபாஷணை, தமையனார் வந்து பலகாரங்கூடச் செய்யாமல் வெளியில் போனது, தன்னை ஹாஸ்டலுக்கு அனுப்பியது ஆகிய காட்சிகள் எல்லாம் ஒருதடவை கண்களின் முன்வந்து நின்றன. இன்றுதான் தமையனாரின் விபரீத எண்ணத்தின் காரணம் இவனுக்குத் தெரிந்தது. மெல்லமெல்லயாகச்

சிந்தித்து, துக்கப்படுவதால் லாபமில்லை என்று அண்ணியாரைச் சமாதானப் படுத்தி—'அம்மா! அண்ணி! நீங்கள் துக்கப்படாதீர்கள் நான் திரும்பவும்



நாளைநின்று வந்து உங்களை அண்ணாவிடம் அழைத்துக்கொண்டு போகிறேன். உங்கள் பேரில் அவருக்குச் சம்சயம் இல்லாமல் போய் விடும். நீங்கள் சுகமுடையவர்களா யிருப்பீர்கள். இப்போது எனக்கு விடை கொடுங்கள்' என்று அண்ணியாரின் பாதங்களைத் தொட்டு வணங்கி தீர்க்கமான பரிசுத்தப் பார்வையுடன் அவளை ஒருதரம் பார்த்துவிட்டு துரைசாமி திருநெல்வேலி வந்து சேர்ந்தான்.

அந்த மறுநாள் சாயங்காலம் தாம்பிரபரணி நதிக்கரை மயானத்தில் ஒரு மணல் திடல்மீது துரைசாமி தனது அங்கவஸ்திரத்தை விரித்துப் படுத்துக்கொண்டு ஆலோசனையில் மூழ்கி யிருந்தான்.

'ஆஹா! எவ்வளவு வேலை நடந்துவிட்டது. அண்ணாவோடு இனி எப்படிச் சொல்வேன்? அவரைக் கண்டபோதே எனக்குப் பேச்சுக் கிளம்பவில்லை. "நான் குற்றமற்றவன் அண்ணா! அண்ணியை அழைத்து வாருங்கள் என்று பாதங்களைப் பிடித்துக் கொண்டேன்—முகங்கொடுத்துப் பேசவில்லையே!—என்ன செய்வது?—அவர்களுடைய இல்லற இன்பவாழ்வுக்கு நான் வேர்ப்புழுவாக வந்து பிறந்தேனா! ஈஸ்வரா! எனது தாயார் நான் சிறு குழந்தையா யிருக்கும்போதே போய்விட்டாள். அக்காள் தங்கைகளும் இல்லை. அண்ணியாரின் திருவடிகளைச் சார்ந்து என் வாழ்க்கையை மாட்சியுறச் செய்யும் மார்க்கங்களைத் தெரிந்து கொள்ளலாம் என்று மகிழ்ச்சியடைந்திருந்தேன். நாங்கள் மிகுந்த பிரியத்தோடிருந்தது உண்மை. நாங்கள் என்ன படித்துக்கொண்டிருந்தாலும் விகற்பபுத்தி அணுவளவாகிலும் தோன்றவில்லையே! அட ராமச்சந்திரா! அந்த எண்ணத்திற்கே ஒரு சிறிதும் காரணமில்லையே! இப்படியா விபரீதமாக வந்து முடியவேண்டும்! நான் அந்நியனா? பிறந்தது முதல் அவர் கையில் வளர்ந்தேனே! எனது தன்மை அவருக்குத் தெரியாமல் போய்விட்டதே! அண்ணியார் முகத்தைக் கண்டவர்கள்—ஐயோ! யாரேனும் அப்படி நினைப்பார்களா! இத்தனை நாள் பழகியும் அண்ணியாரின் களங்கமற்ற தன்மையை அவரால் அறிந்து கொள்ள

முடியவில்லையா? இனி விசாரிப்பதில் என்ன பலன்? சர்வ சுகத்தோடும் ஐக்கிய பாவத்தோடும் நடந்துவந்த குடும்பம் ஒன்று என்னால் நாசமாகி விட்டது! இவ்விருவருடைய சுகவாழ்வையே நான் கோரியிருந்தேன். அண்ணாவின் சந்தேக நிவாரணத்திற்கு எனது அற்பமான உயிரைப் பலி கொடுக்கட்டுமா?—ஆத்மஹத்தி பாவமல்லவா! ஆம்!—நான் உயிரோடிருப்பதால் யாருக்கு என்ன இலாபம்—அண்ணாவுக்கு ஒரு வேளை சந்தேகம் நீங்கி விட்டாலும் நான் எப்படி அவருடைய முகத்தில் விழிப்பேன்? என்னைக் காணும்போது அவருக்குப் பழைய நினைவு வாதிக்காதா?—இவ்வளவுக்கும் நான் பிழைத்திருப்பது யாருக்கு உபகாரம்? தாய் தந்தையர் இல்லை. எல்லாவற்றிற்கும் அண்ணாவையே நம்பினேன். அவர் சிந்தை முரண்பட்டு விட்டது. நான் குற்றமற்றவன் என்று புலப்பட்டாலும் பழைய விசுவாசம் இருக்குமா? அண்ணியாரைப் பாராமல் இருப்பது எப்படி? பார்த்தாலும் சுயேச்சையான ஹிருதயத்தோடு பழையபடி அண்ணி முகத்தைப் பார்க்க முடியுமா? சந்தேகம், பயம் என்னை வாதிக்காவா?—அப்பப்பா! எனக்கு இந்த வாழ்வு ஆகாது—பரமேஸ்வரா! இந்த அநாதையைக் காப்பாயாக. இதுவே எனது கடைசிப் பிரார்த்தனை' என்று இன்னும் ஏதோ ஆலோசனையில் பத்து நிமிஷங்கள் ஆழ்ந்திருந்துவிட்டு எழுந்து கை கெடியாரத்தைப் பார்த்து 'இன்னும் ரயிலுக்கு நேரமிருக்கிறது—அண்ணியாரை நாளை வண்டியில் அழைத்துக்கொண்டுவந்து அவரிடம் சேர்த்துவிடுகிறேன். அவ்வளவோடு இந்த உலக வாழ்வு எனக்குப் போதும்' என்று தீர்மானித்துக் கொண்டு காலேஜை நோக்கிப் புறப்பட்டான்.

* * * *

மறுநாள் ஒன்பது மணியாயிற்று. ராமலிங்கம் பிள்ளை சமையல் செய்து கொண்டிருந்தார். துன்பத்திலிருந்துவிட்டு இன்பம் பெறலாம்; இன்பத்திலிருந்து பழகிவிட்டுத் துன்பப்பட முடியாது. தம்முடைய பிரியை துவைத்துவைத்த தூய ஆடைகளைத் தரித்துச் சுகமாக உண்டு களித்த ராமலிங்கம் பிள்ளைக்கு இப்போது அடுப்புப்பக்கம் சொல்ல முடியாத துயரம் உண்டாயிற்று. அது ஏனோ பெண்களிடம் கட்டுப்பட்டிருக்கிறதுபோல் அக்கினி பகவான் ஆண்களிடம் அவ்வளவு துரிதமாகச் சொன்னபடி கேட்பதில்லை. ஒரு புட்டி கெரோசின் ஆயில் ஊற்றினாலும் ஒரு பெட்டி நெருப்புக்குச்சி தீர்ந்துபோனாலும் அந்த அங்கியங்கடவுள் காட்சி கொடுப்பதே இல்லை. தாமே சமைத்துச் சாப்பிடுவதில் உள்ள கஷ்டங்கள் தோன்றிக் கொண்டிருந்தன. நாயகி எழுதிய கடிதங்கள் மனதைக் கரைத்தன. துரைசாமியின் களங்கமற்ற தன்மையை நினைத்துக் கொண்டு "ஐயோ! இவன் தங்கக் கட்டியாயிற்றே, நான் எவ்வளவு தூரம் அலக்கழித்து விட்டேன்" என்று சொல்லிக் கொண்டார். ஆனால் இனி எப்படி அவனை அழைத்துவரச்

சொல்வது என்று தடுமாறிக் கொண்டிருந்தார். ராமலிங்கம் பிள்ளையின் உள்ளத்தில் ஞானோதயம் உண்டாயிற்று. அவருடைய உள்ளத்தைப் பற்றியிருந்த இருள் விலக ஆரம்பித்தது. இந்த நிலைமையில் சமையல் செய்து கொண்டே ராமலிங்கம் பிள்ளை முத்தம்மாள் எழுதிய கடிதங்களின் விஷயத்தில் தமது மனம் கல்லாகப் போய்விட்டதை நினைத்து நினைத்து உருகினார். "எனது சந்தேகமே என்னை ஆவேசித்துக் கொண்டது. என். அருமை முத்து! நான் வீணாக உன்னைச் சந்தேகித்து விட்டேனே! துரைசாமி! எனது வலது புயத்திற்கு நிகரான துரைசாமி! நேற்று எனது பாதங்களில் விழுந்து "அண்ணா! அண்ணியை அங்கீகரியுங்கள்; நாங்கள் நிரபராதிகள்" என்று விம்மி விம்மி அழுதாயே! என் மனம் நீராய்க் கரைந்ததானாலும் "அழைத்துக்கொண்டு வா தம்பி" என உன்னைக் கட்டித் தழுவிக்கொள்ளாமல் போனேனே! இந்தப் பேய் என்னை விட்டுப்போகச் செய்வதெப்படி? அவன் நேற்றுச் சாயங்காலத்திலிருந்து எங்கே போனானோ? இதுவரை சாப்பாட்டுக்குங்கூட வரவில்லையே! எங்கே ஆழத்தில் மூழ்கிப் பிராணனை விட்டு விட்டானோ! துரையா! வா அப்பனே! நான் அநுமானித்த நாள்முதல் இன்றுவரை உள்ள உனது சரீர நிலைமையே நீ குற்றமற்றவன் என்று நிரூபிக்கிறது. உனது அண்ணியின் கடிதங்கள் அவளது காதற்பெருக்கை வெளியிடுகின்றன. என் மனம் சில நாட்களாக மாறுதலடைந்து வந்தாலும் ஏனோ! இன்னும் சம்பூரணமாக கல்மிஷம் அற்ற மனதையுடையவன் ஆயினேனில்லை! ஆனால் அப்படி யல்ல. நீ நேற்று என்னைத் தூய உள்ளத்தனாக்கி விட்டாய்! வா ஐயனே! சாப்பிடலாம் வா! உனது அண்ணியை வரவழைக்கிறேன்" என்று பித்துப்பிடித்தவனைப் போன்று ஏதேதோ பாவித்துக்கொண்டு ராமலிங்கம் பிள்ளை ஆலோசனையி லிருக்கும்போது வீதி வாசலில் வண்டிவந்த சப்தம் கேட்டது. உடனே எழுந்து ராமலிங்கம் பிள்ளை வீதிக் கூடத்திற்குள் வந்தார். துரைசாமியும் தமது காதலியும் கூடத்துக்குள் கால் வைத்தார்கள். ராமலிங்கம் பிள்ளை அவர்களைக் கண்டு வெளுத்துப் போனார். முத்தம்மாள் தயக்கத்தோடு அசைவற்று நின்று பதியின் முகத்தை நோக்கிக் கொண்டிருந்தாள். இப்படி இரண்டு மூன்று நிமிஷங்கள் கழிந்திருக்கும். சுவரில் சாய்ந்து கொண்டிருந்த துரைசாமி திடீரென்று நிலத்தில் சாய்ந்தான். இரண்டு மூன்று தடவை வாந்தியாயிற்று. கண்கள் செருகிச் சோர்ந்தன. "தம்பி!" என்று ராமலிங்கம் பிள்ளையும், "துரைசாமி! துரைசாமி!" என்று முத்தம்மாளும் அவனுடைய இரண்டு பக்கத்திலும் பரபரப்புடன் உட்கார்ந்தனர். துரைசாமி மரண வேதனையில் கைகளையும் கால்களையும் உதறினான். சிறிது நேரத்தில் கைகள் மார்புக்கு வந்துவிட்டன. கஷ்டத்தோடு கஷ்டமாய் தமயனார் பக்கம் ஒருதடவையும் அண்ணியார் பக்கம் ஒருதடவையும் துரைசாமி தனது பார்வையைச் செலுத்தினான். மறுபடியும் பத்து நிமிஷத்தில் துரைசாமி இல்லை. வெறுங் கட்டைதான் மிச்சம்.

"ஐயோ! தம்பி! எனது அநுமானப்பேய் உன்னை விழுங்கிவிட்டதா?" என்று ராமலிங்கம்பிள்ளை மேலே புரண்டு மூர்ச்சையானார்.

"ஐயோ! எங்களுக்காக நீ பலியாகிவிட்டாயா கண்ணே! எவ்வளவு வேலைசெய்துவிட்டாய்" என்று முத்தம்மாள் அழ ஆரம்பித்தாள்.

* * * *

துரைசாமியின் கோட்டு ஜேபியில் இரண்டு கடிதங்கள் காணப்பட்டன. அவற்றுள் ஒன்றில்,

சிலநாட்களாக எனக்கு இந்த உலகவாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டுக்கொண்டிருந்தது. அதனால் காலேஜ் லேபரேட்டரிலிருந்து பொட்டேஷியம் ஸினேட் எடுத்து விழுங்கி எனது பிராணனை என்னுடைய கைகளாலேயே முறித்துவிட்டேன். எனது மரணத்துக்கு நானே கர்த்தா.

14–10–23
திருநெல்வேலி

இங்ஙனம்
K. துரைசாமி.

இரண்டாவது கடிதத்தில்

மாட்சிமிக்க அண்ணா!

திருவடிக் கமலங்கட்கு அநேக நமஸ்காரம். நீங்கள் என்னைச் சிறுவயதிலிருந்து வளர்த்து வாலிபனாக்கினீர்கள். இதற்குக் கைம்மாறாகத் தங்களுக்கு இந்த ஜன்மத்தில் ஒன்றும் செய்யாமல் போய்விட்டமைக்கு மிக வருந்துகிறேன்! நான் தங்களையும் திருச்செல்வி அண்ணியாரையும் தந்தை தாயராகப் பாவித்து நடந்து வந்தேன். அதற்குக் கடவுளே சாக்ஷி. தெரியாமல் நான் ஏதாவது செய்திருந்தால் மன்னிப்பீர்களாக. பரமபதிவிரதா சிரோமணியாகிய அண்ணியாருடைய பாதகமலங்களுக்கு எனது அன்பார்ந்த நமஸ்காரம்.

அண்ணா! என்னவென்று எழுதுவேன். தாங்கள் அர்த்த நாரீஸ்வர ஐக்கிய பாவத்துடன் இல்லறத்தை இனிது நடாத்த வேண்டுமென்பதே எனது பிரார்த்தனை.

14–10–23
திருநெல்வேலி

இங்ஙனம்
K. துரைசாமி.

# ஸ்ரீ நெலமாவு மடாதிப
# ஸ்ரீ நரஸிம்ஹபாரதி ஸ்வாமிகளின்
# திவ்ய சரித்திரம்.

(A. நாராயணசாமி ஐயர், பி.ஏ., பி.எல்.)

ஸ்ரீ நெலமாவு மடாதிப ஸ்ரீநரஸிம்ஹ பாரதிஸ்வாமிகள் மஹாதானபுரத்தில், விபவ வருஷம் மார்க்கசிர சுத்தஸப்தமி திதியில் ஸித்தி அடைந்த விஷயம் எல்லாரும் அறிந்ததே. இந்தசமயம் அந்த மஹானின் திவ்ய சரித்திரத்தின் ஸாராம்ஸத்தின் சுருக்கத்தை இவ்விடம் எடுத்துரைப்பது யுக்தமே.

ஸ்ரீ நெலமாவு மடமென்பது பம்பாய் ராஜதானி உத்தர கர்நாடக ஸித்தாபுர தாலூகா ஸுரநதிதீரத்தில் ப்ரஹ்லாதாச்ரமத்தில் ஸ்ரீ வித்யாரண்ய ஸ்வாமிகள் சிஷ்யர்களுள் ஒருவரான ஸ்ரீ க்ருஷ்ணதீர்த்த ஸ்வாமிகளால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீங்கேரி மடத்தின் உபமடங்களுள் ஒன்று. ஸ்ரீ லக்ஷ்மீநரஸிம்ஹ ஸ்வாமியே இம்மடத்தின் பிரதான தெய்வம்.

நமது ஸ்வாமிகள் பூர்வாச்ரமத்தில் ஷை தாலூகா ஸாரங்க தொட்டுமனை என்னும் கிராமத்தில் மஹாசாஸ்திர பண்டிதரும் ஜ்யோதிஷ நிபுணருமான ப்ரும்மஸ்ரீ ஸுப்பாபட்டர் அவர்களுக்கு கர வருஷத்தில் கடைசிக் குழந்தையாக அவதரித்து விஸ்வநாதன் என்ற பெயருடன் வளர்ந்து வந்தார். இவர் பிறந்ததும் பிதா குழந்தை ஜனித்த லக்னம் தாம் ஒரு வருஷத்தில் காலமாய் விட வேண்டுமென்றும் குழந்தை அவசியம் ஸந்நியாசியாக வேண்டுமென்றும் கூறினார். அதேமாதிரி அவர் காலகதியானார். குழந்தையும் அதிபால்யத்திலேயே ஈஸ்வரபக்தியுடன் வளர்ந்து ஸதாபூஜைகள் செய்யுமிடங்களிலேயே இருந்துவந்தது. விகாரி வருஷம் உபநயனம் செய்விக்கப்பட்டு வேதாத்யயனங்களைச் செய்துகொண்டு வந்தார். இப்படியாக இருக்கும் சமயம் சோபகிருது ஸம்வத்ஸரத்தில் ஷை மடத்தின் முந்தின மடாதிபதிகளான ஸ்ரீநாராயண பாரதிஸ்வாமிகள் ஸஞ்சாரத்திலிருந்த சமயத்தில் இந்த விஸ்வநாதனையே தான் சிஷ்யனுக்க உத்தேசித்திருப்பதாகத் தெரிவித்து அந்தப்பிரகாரம் நடந்துகொள்ளும்படி ஆஞ்ஞாபித்து ஸித்தி அடைந்துவிட்டார்கள். அதேபிரகாரம் சிஷ்யர்களும் அவரை தக்ஷணமே அழைத்துவந்து பெரியவர்களிடம் ஆச்ரமாதிகள் எடுத்துவைத்து ஸ்ரீநரஸிம்ஹ பாரதிஸ்வாமிகள் என்ற பட்டப் பெயருடன் தங்களுக்கு மடாதிபதிகளாக நியமனம் செய்துகொண்டு தக்க சாஸ்திரஞர்களை வரவழைத்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு வேண்டிய ஸௌகர்யாதிகள் செய்துவைத்தார்கள். ஸ்ரீமடத்திற்கென்றே ஏற்பட்டதுபோல் தெய்வீகத்தன்மை பொருந்திய நமது ஸ்வாமிகளுக்கு சாஸ்திராப்யாஸங்கள் ஸர்வமும் அதிசீக்கிரத்திலேயே ஏற்பட்டு பிரமாதீச வருஷம் மந்திரமூர்த்தி ஸ்ரீ சிதானந்த கனேந்த்ரரால் ஸ்ரீவித்யா மந்த்ரோபதேசமும், கமலானந்தர் என்னும் யோகநாமத்துடன் பூர்ணதீக்ஷையுமாகி, தம் சிஷ்யமண்டலிக்குள் ஸஞ்சாரமும், உபந்யாஸமும், உபதேசங்களும் செய்துகொண்டிருந்தார்கள்.

இப்படி இருக்கும் சமயம் சுமார் 8 வருஷங்களுக்குமுன் ரௌத்ரி ஸம்வத்ஸரத்தில் வேதாந்த சுத்தாத்வைத க்ரஹணத்தின் பொருட்டு ஸ்ரீ ஸ்வாமிகள் மாத்திரம் இரண்டு சிஷ்யர்களுடன் ஸ்ரீங்கேரிக்கு வந்து

ஸ்ரீஜகத்குரு ஸ்ரீங்கேரி மஹா ஸந்நிதானங்களிடத்தில் ஸை. அப்பியாஸாதிகள் சுமார் மூன்றுவருஷகாலம் செய்துகொண்டிருந்தார்கள். அதேசமயத்தில் பூர்வாச்ரமத்தில் திருநெல்வேலி வக்கீல் ராமசந்திர அய்யர் எனப் பெயர் பூண்டவரும், ஸ்ரீங்கேரி ஸ்ரீமுக்தஸ்வாமிகள் காலம்முதல் தீவ்ர வைராக்கியத் துடன் அடிக்கடி ஸ்ரீங்கேரிக்கு வந்து வேதாந்த விசாரம் செய்துகொண் டிருந்தவரும், இப்போது தேவர்மலையில் ஸ்ரீராமானந்த ஸரஸ்வதிஸ்வாமிக ளாய் விளங்கிக்கொண்டிருப்பவருமான மஹான் அவ்விடமிருந்தார்கள். அந்த ஸமயம் நமது ஸ்வாமிகளே ஸ்ரீராமானந்தருக்கு துரீய ஆச்ரமம் கொடுத்தார்கள்.

ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீங்கேரியில் சுமார் மூன்று வருஷகாலம் வேதாந்த அப் யாஸம் செய்தபின் தக்ஷிணஸேதுதீர்த்தயாத்திரையையும் மடஜீர்ணோத்தார ணத்தையும் உத்தேசித்து ஸ்ரீங்கேரி ஸ்ரீமஹாஸந்நிதானங்களின் அனுக்ர ஹத்துடனும் ஸ்ரீமஹா ஸந்நிதானங்களின் ஸ்ரீமுகத்துடனும் ஸ்ரீஸ்வாமிகள் சில சிஷ்யர்களுடன் சுமார் ஐந்துவருஷகாலமாக தக்ஷிணதேசத்தில் நஞ்சன் கூடல், ஈரோடு, கோயமுத்தூர், பழனி, திண்டுக்கல், மதுரை, அனந்தசய னம், திருநெல்வேலி, ராமேஸ்வரம், ராமநாதபுரம், செட்டிநாடு, ஸ்ரீரங்கம், குளித்தலை முதலிய அநேக இடங்களுக்கு விஜயம் செய்து பக்தகோடிகளால் ஆங்காங்கே வெகு விமரிசையாகவும் விநயத்துடனும் பக்தி சிரத்தையுடனும் ஸமர்ப்பிக்கப்பட்ட ஸத்கிருத்யாதி ஸேவைகளையடைந்து எல்லோருக்கும் பூஜாதிகளாலும் உபந்யாஸங்களாலும் உபதேசங்களாலும் ஆஸ்திகபுத்தியை அதிகரிக்கச் செய்து, ஸந்த்யா, பக்தி, தர்மம், விக்ரஹ ஆராதனை இத்யாதி விஷயங்களைக் குறித்து உபந்யாஸங்கள் செய்து "ஸ்வதர்மத்தை அனுஷ்டிப் பதால் தான் ஸத்கதி" என்கிற ஹிதோபதேசத்தை நன்கு ஊன்றச்செய்து கொண்டு கடைசியாக மஹாதானபுரத்தில் விஜயம் செய்தார்கள். அவ்விடம் வந்த 11-ம் நாள் புதன்கிழமை மார்க்கசிர சுத்த ஸப்தமி திதி காலையில் திடீ ரென்று ஸ்ரீஸ்வாமிகள் ஸித்தி அடைந்துவிட்டார்கள். இவ்வளவு சிரத்தை யுடன் இருந்த தக்ஷிண தேசத்து ஆஸ்திக மகாஜனங்களுக்கு என்றும் வைதிக பக்தி சிரத்தை குறையாமலிருப்பதற்கு ஞானதீபமாக இருக்கும் நிமித்தமே கருணாமூர்த்தியான ஸ்ரீஸ்வாமிகள் மஹாதானபுரம் என்னும் காவேரிதீர க்ஷேத்திரத்தில் ஸித்தியடைந்து ஸச்சிதானந்த நித்ய முக்தராய் விளங்குகின்றார்போலும்! மஹாதானபுரம் ஜனங்களின் பாக்கியமே பாக்யம்!

ஸ்ரீ ஸ்வாமிகளின் ஸஞ்சாரத்தால் நஞ்சன்கூடல், கோயமுத்தூர், மதுரை, திருநெல்வேலி, தேவகோட்டை, ஸ்ரீரங்கம் முதலிய இடங்களில் சாதுர் மாஸ்ய விரதங்கள் அனுஷ்டிக்கப்பட்டன. ஆங்காங்கே ஸ்ரீ ஸ்வாமிகளின் தர்சன மாத்ரேண ஆனந்தமடைந்தவர்களும், உபந்யாஸங்களாலும், உப தேசங்களாலும் க்ருதார்த்தர்களானவர்களும், கஷ்ட நிவாரணமடைந்தவர் களும் கணக்கில்லை. அனந்தசயனம் ஸமஸ்தானத்தில் வெகு விமரிசை யாகவும் சிரத்தையாகவும் ஸ்ரீமடத்திற்கு மரியாதைகள் செய்யப்பட்டன. செட்டிநாட்டில் கொத்தமங்கலம் என்னும் ஊரில் ஸ்ரீமான் பெத்தாச்சி செட்டியார் அவர்கள் வெகு சிரத்தையுடனும், ஊக்கத்துடனும் இரண்டுமாத காலம் ஸதா ஸத்கிருத்தியாதிஸேவைகள் செய்துகொண்டிருந்த விஷயமும் ஸ்ரீஸ்வாமிகள் அவர் பக்திக்கு மெச்சி அவருக்கு "பக்தகேசரி" என்னும் பட்டம் அளித்ததும் இவ்விடம் கூறுவது முறையேயாகும்.

ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீ ஸ்ரீங்கேரி மஹாஸந்நிதானங்கள். ஸ்ரீ ஆதி ஆசார்யாள், ஸ்ரீ மடத்தின் மூலதெய்வமாகிய ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ஹஸ்வாமி, ஸ்ரீராஜராஜேஸ்வரி, ஸ்ரீ சாரதாம்பாள் பேரிலும் இன்னும் ஆங்காங்கே ஸஞ்சாரத்தில் இருந்த முக்கிய ஸ்தலங்களின் மூர்த்திகள் பேரிலும் ஸ்துதிகள் செய்து மேலும் ஸ்ரீ ஸத்குருத்கர்ஷமஞ்சரிகா ஸ்துதி காமதேனு ஸ்துதி இத்யாதி ஸ்துதிகளும் செய்து அந்த ஸ்தோத்திரங்கள் இரண்டுபாகமாக புஸ்தகரூபமாக ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணிவிலாஸ் முத்ராலயத்தில் அச்சிடப்பட்டு வெளிவந்திருக்கின்றன.

பூர்ணானந்த ஸ்வரூபியாகையால் தர்சனமாத்ரேண ஆனந்தத்தை உதிக்கச்செய்துகொண்டிருந்த ஸ்ரீஸத்குரு ஸ்வாமிகள் நாமரூபாதி பந்தங்கள் வேண்டாமென்றே மஹாதானபுரத்தில் ஸித்தியடைந்து, ஸர்வ வ்யாபியாய், அகண்ட ஸச்சிதானந்தராய் நம்மெல்லோருக்கும் அஞ்ஞான இருளைப் போக்கி ஞானோதயத்தை உண்டுபண்ணுவதற்காக ஞானதீபமாய் விளங்கிக்கொண்டிருக்கிறார்கள். அப்பேர்ப்பட்ட ஸத்குருவின் கருணா விசேஷத்தால் நாமெல்லாரும் ஈஸ்வரானுக்ரஹத்தை அடைந்து கிருதார்த்தர்களாவோமாக.

## ஓர் ஐய வினா.

நாளது விபவஹு மார்கழிமீ வெளியான "ஆனந்தபோதினி" சஞ்சிகையில் 303-ம் பக்கத்தில் அருட்பெருஞ்ஜோதி அற்புதப் பத்திரிகை யொன்று கண்டேன். அதில் "அடியிற் குறித்த தருணந்தொடங்கி வந்து வந்து தெரிசிக்கப் பெறுவீர்களாயிற் கருதியவண்ணம் பெற்றுக் களிப்படைவதுமன்றி இறந்தவர் உயிர் பெற்றெழுதல், மூப்பினர் இளமைபெற்று நிற்றல் முதலிய பல வகை அற்புதங்களைக்கண்டு பெருங்களிப்பும் அடைவீர்கள்" என்று காணப்படுகிறது. அவ்வடலூர் சபைக்கும் என் ஊருக்கும் சுமார் 3 மைல் தூரமிருக்கும். நானும் அங்கு அடிக்கடி செல்வதுண்டு. ஆனால் மேற்குறித்த அரிய அற்புதச்செயலாகிய இறந்தவர் உயிர்பெற்றெழுதல், மூப்பினர் இளமைபெற்று நிற்றல் முதலிய அதிசயமொன்றும் கண்டதில்லை. ஆனால் ஒன்று நினைக்கலாம். இராமலிங்க சுவாமிகளிருந்த அக்காலத்தில் நடந்திருக்கலாமென்று நினைத்தாலோ எனது தாயார் தகப்பனார் நேரில் இராமலிங்க சுவாமிகளைத் தெரிசித்தும் கண்டு பேசியுமுள்ளவர்கள். அவர்களும் அப்படி நடந்ததில்லை யென்கின்றார்கள். இன்னும் அருட்பாவில் "செத்தவர் எழுவாரென்று கைத்தாளம் போடு" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இவற்றின் பொருள் விளங்கவில்லை. அன்பர்கள் யாவராயினும் "ஆனந்தபோதினி" வாயிலாகத் தெளிவுபடுத்துவாராக. சுருதி யுக்தி அனுபவத்தோடு பதில் வெளியிடக் கோருகிறேன்.

பின்னலூர்-பி. சி. இராமலிங்கம் பிள்ளை.

## கணித சாஸ்திரப் பதங்கள்.

307-ம் பக்கத் தொடர்ச்சி.

(எஸ். சிவராமன், பி.ஏ., எல்.டி., சேலம் காலேஜ்.)

### GRAPHS—
### படக் குறிப்புகள்.

Variable quantity—மாறுமளவு.
Variable—மாறுவது.
Constant—மாறாதது.
Lines of reference—வழி காட்டுங் கோடுகள்.
X *axis*—X அக்ஷக் கோடு.
Y *axis*—Y அக்ஷக் கோடு.
Origin—துவக்கப் புள்ளி.
Co-ordinates—அக்ஷ தூரங்கள், புள்ளித் தூரங்கள்.
Abscissa—படுதூரம்
Ordinate—குத்துத்தூரம். [தல்.
Plotting the point—புள்ளியை இடு
Quadrant—காற்பாகம்.
Scale—பிரதி யளவு. [ணம்.
Linear equation—கோட்டுச் சமீகர
Interpolation — இடையி லெழுதுதல், இடை யீடு.
Statistics—ஸ்திதிகதித் தொகுதிகள்.
Ready reckoner — உடனே கணிப்போன், உடனே கணிப்பது.

### RATIO—
### தரம்.

[The term 'சம்பந்தம்' will conflict with the translation of (functional) relation.]

Terms—அங்கங்கள்.
Antecedent—முன்னுறுப்பு.
Consequent—பின்னுறுப்பு.
Proportion—சமதரம்.
Extremes—இறுதியானவை.
Means—நடுவானவை.
Fourth proportional — நாலாவது சமதர உறுப்பு.
Mean proportional — நடுச் சமதர உறுப்பு. [தரம்.
Multiplying ratio — பெருக்கும்
Direct proportion — நேரான சம தரம். [தரம்.
Inverse proportion—மாறான சம
Vary—வேறுபடு.
Compound proportion — கூட்டுச் சமதரம்.
Vary jointly as $a$ and $b$—$a$ உடனும் $b$ உடனும் கூட்டாக வேறுபடு.
Proportional division — தரப்படி வகுத்தல்.

### PERCENTAGE—
### நூற்று வீதம், சத வீதம்.

Rate—வீதம்.
Commission—தரகு.
Disconnt—தள்ளுபடி. [ணம்.
Premium — கைம்மாற்றுக் கட்ட
Profit—லாபம். Loss—நஷ்டம்.
Cost price—வாங்குகிற விலை.
Selling price—விற்கிற விலை.
Gross Profit—மொத்த லாபம்.
Net Profit—அயன் லாபம்.

### INTEREST—
### வட்டி.

Principal—முதல், அசல்.
Rate percent per annum—வருஷத்துக்கு நூற்றுக்கு வீதம்.
Simple interest—தனி வட்டி.
Amount—தொகை, மொத்தம்.
Present value—நிகழ் மதிப்பு. [படி.
True discount—உண்மைத் தள்ளு
Compound interest—கூட்டு வட்டி.
Effective annual rate — பயன் வருஷ வீதம்.

### GEOMETRY—
### க்ஷேத்திர கணிதம்.

Solid—திடம்.
Surface—பரப்பு.
Line—கோடு.

Straight line—நேர் கோடு.
Curved line—வளைவு கோடு.
Angle—கோணம்.
Right angle—நேர் கோணம்.
Perpendicular—லம்பம்.
Obtuse angle—விரிகோணம்.
Acute angle—குறுங்கோணம்.
Degree—பாகை.
Adjacent angles — அண்டைக் கோணங்கள், அயல் கோணங்கள்.
Complementary angle — முழுதாக்கும் கோணம்.
Supplementary angle—நீட்டுங்கோணம்.
Vertically opposite angle — நேர் எதிர் கோணம்.
Bisector—இரண்டாக்குங் கோடு.
Parallel straight lines—சமாந்தர நேர் கோடுகள்.
Equidistant—சம தூரமான.
Produce—நீட்டு.
Transversal—வெட்டுக் கோடு.
Corresponding angles — ஏற்ற கோணங்கள்
Alternate angles — ஒன்று விட்ட கோணங்கள்.
Interior angles on the same side of the cutting line—வெட்டுக் கோட்டிற்கு ஒரே பக்கத்திலுள்ள உட் கோணங்கள்.
Theorem—பிரமேயம்.
Square—சதுரம்.
Rectangle—நீள் சதுரம், நீண்ட சதுரம்.
Diagonal—குறுக்குக் கோடு.
Triangle—முக்கோணம்.
Equilateral—சமபக்க. Isosceles—இருசமபக்க. Scalene—அசம.
Side—பக்கம்.
Exterior angle—வெளிக் கோணம்.
Interior opposite angle — உள்ளெதிர் கோணம்.
Right angled triangle—நேர்கோண முக்கோணம்.
Hypotenuse—எதிர்ப்பக்கம்.
Base—அடி. Vertex—உச்சி.
Altitude—உயரம்.
Congruence—சர்வ சமம்.
Coincide—ஒன்று சேர்.
Fit—பொருந்து.
Angle of elevation-உயரக்கோணம்.
Angle of depression.ஆழக்கோணம்.
Median—மத்தியகம்.
In-, Circum-, Ex-circle — உள்-, சுற்று-, வெளி-வட்டம்.
In-, Circum-, Ex-centre — உள்-, சுற்று-, வெளி-மையம்.
Concurrent—ஒன்றுயச் சந்திக்கிற.
Ortho-centre—நேர்மையம்.
Centroid—பதார்த்த மையம்.
Parallelogram — சமாந்தர நாற்பக்கம், சமாந்தர உரு.
Rhombus—துல்ய நாற்பக்கம்.
Trapezium—குறை சமாந்தர நாற்பக்கம், குறை சமாந்தரம்.
Quadrilateral—நாற்பக்கம்.
Polygon—பல பக்கம், பலகோணம்.
Regular figure—ஒழுங்கான உருவம்.
Irregular figure-ஒழுங்கற்ற உருவம்.
Similar figures—போன்ற உருவங்கள், ஒரமைப்புருவங்கள்.
Hexagon—அறு கோணம்.
Octagon—எண் கோணம்.
Circle—வட்டம். Centre—மையம்.
Circumference — சுற்றளவு, சுற்றுக் கோடு.
Diameter—வ்யாஸம்.
Radius—ஆரம். Chord—நாண்.
Arc—வில், வளைவு பாகம்.
Secant—நீள் நாண்.
Major (arc)—பெரிய.
Minor (arc)—சிறிய.
Segment—பகுதி. Sector—சேதம்.
Symmetry—பாரிச நேர்மை.
Subtend—எதிர் வியாபி.
Tangent—தொடு கோடு.
Contact—தொடல், ஸ்பரிசம்.
Direct common tangent—நேரான பொதுத் தொடுகோடு.
Inverse common tangent—மாறுன பொதுத் தொடு கோடு

## சிறுவர் விரும்பும் விளையாட்டு.

(M. V. ராமராவ்.)

கீழ்க் குறிப்பிட்டிருக்கும் விளையாட்டைத் தமிழறிந்த சிறுவர்கள் மூவர், நால்வர், அறுவர், எண்மர் ஆக விளையாடலாம். சாதாரணமாக இதைப் பட்டா விளையாட்டு என்பர். ஒவ்வொரு வரிசைக்கும் ஒரு பட்டா வென்று பெயர். அவைகளுக்கு வரிசையாக எண்கள் கொடுக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு பட்டாவிலும் நான்கு பெயர்கள் ஏறக்குறைய ஒரு இனத்தைச் சேர்ந்தனவாக விருக்கும்.

### விளையாடும் முறை·—

பட்டாக்களில் காட்டிய ஒவ்வொரு பெயரையும் பிரத்தியேகமாகச் சிறு சிறு அட்டையில் அவைகளுடைய எண்ணுடன் எழுதவேண்டும். பின் அவைகளைக் குலுக்கி, கலந்து ஆடுபவர்களுக்கு சரியாக பங்கிட வேண்டும். நால்வர் ஆடுவதாக வைத்துக் கொண்டால், 24 பட்டாக்களிலுள்ள 96 பெயர்களையும், ஒவ்வொருவருக்கு 24 பெயருள்ள அட்டைகளைச் சரியாக பாகித்துக் கொடுத்தபின் ஆட உட்கார வேண்டும்.

முதலில் ஒருவர் தம்மிடத்திலிருக்கும் நெம்பருள்ள பெயர்களில் அந்த இனத்தைச் சேர்ந்தவைகளை (தம்மிடத்தில் இல்லாவிடில்) மற்றொருவரைக் கேட்கவேண்டும். ஒரே இனத்தில் உள்ள நான்கு பெயர்களும் அவருக்கு வந்துவிட்டால், அவர் ஒரு பட்டாவைக் கெலித்ததாகக் கருத்து. அப்படிப்பட்ட 6 பட்டாக்களுக்கு மேல் நால்வரில் யாருக்கு வருகிறதோ, அவரே அந்த விளையாட்டில் தேர்ந்தவராகக் கருதப்படுவர்.

**கீழ்க் குறித்திருக்கும் நெம்பர்களையும் பெயர்களையும் வரிசைக் கிரமமாக ஒரு பெரிய அட்டைக் காகிதத்தில் எழுதி ஆடுபவர்கள் முன்னே வைத்துக்கொள்ள வேண்டும்.**

| நெம்பர். | பட்டாக்கள். |
|---|---|
| 1. | ராமர், லக்ஷ்மணர், பரதர், சத்ருக்னர். |
| 2. | கங்கை, சிந்து, கோதாவரி, கிருஷ்ணை. |
| 3. | மரம், செடி, கொடி, புல். |
| 4. | நதி, ஏரி, குளம், கடல். |
| 5. | A, B, C, D. |
| 6. | காஞ்சி, காசி, மதுரை, ஸ்ரீரங்கம். |
| 7. | ருக்வேதம், எஜுர்வேதம், சாமவேதம், அதர்வண வேதம். |
| 8. | நாடு, நகரம், தேசம், கண்டம். |
| 9. | பூ, பிஞ்சு, காய், பழம். |

10. சிங்கம், யானை, புலி, கரடி.
11. சீதை, த்ரௌபதி, மாண்டவி, ருக்மணி.
12. அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு.
13. மா, பலா, தென்னை, பனை.
14. கருப்பு, சிவப்பு, நீலம், பச்சை.
15. சாமம், வேதம், தானம், தண்டம்.
16. க்ருத, த்ரேதா, த்வாபர, கலி (யுகங்கள்).
17. நாள், வாரம், மாதம், வருஷம்.
18. பொன், வெள்ளி, செம்பு, பித்தளை.
19. பால், தயிர் மோர், வெண்ணை.
20. மாதா, பிதா, குரு, தெய்வம்.
21. தச்சன், தட்டான், கருமான், கொல்லன்.
22. தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.
28. ரோஜா, மல்லிகை, ஜாஜி, அலரி.
24. கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு.

உதாரணமாக A, B, C, D என நால்வர் ஆடுகிறார்கள். A என்பவரிடத்தில் 8 நெ. நாடு, 14 நெ. கருப்பு, 14 நெ. பச்சை, 20 நெ. தெய்வம்.......................... ஆக 24 சிறு அட்டைகளின் வார்த்தைகள் இருக்கின்றன. அவர் 8 நெ. பட்டாவிலுள்ள மீதி இருக்கும் நகரம், தேசம், கண்டம் ஆகிய இவைகளில் ஒன்றை மற்ற மூவரில், ஒருவரைக் கேட்க வேண்டும். கேட்பவரிடத்தில் இல்லாவிடில், உடனே A என்பவர், அருகாமையிலுள்ள Bக்கு பெரிய அட்டையைக் கொடுத்து அவரையும், அதே மாதிரி, தம்மிடமிருக்கும் நெம்பருக்குச் சரியான இனங்களைக் கேட்கச் சொல்லவேண்டும். இதே மாதிரி கையிலிருக்கும் எல்லாச் சிறு அட்டைகளும் முடிகிறவரையில் ஆடவேண்டும். யாருக்கு அதிகமாக பட்டாக்கள் வருகின்றனவோ, அவரே கெலித்ததாகக் கருதப்படுவர்.

**குறிப்பு:**—சிறிய அட்டையின் நிகரம்

| 20 நெ. மாதா |
| --- |

---

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாத வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.



# ஆன்றோர் அமுதமொழிகள்

(219-ம் பக்கத் தொடர்ச்சி.)

N. A. துரை, B. A.

86. தெய்வப் புலவனுக்கு நாவுணருஞ் சித்திரக்காரனுக்குக் கையுணரும். (பழமொழி.)

The tongue of the inspired poet and the hand of the painter perform their functions *Proverb.*

87. உணர வுணரு முணர்வுடையாரைப் புணரப் புணரு மாமின்பம் (நாலடியார்.)

To be united in friendship with the prudent who think of what they ought to think is productive of the highest felicity *Naladiyar.*

88. உண்ட சுற்ற முருகும்.

Relations or friends who have eaten together will cherish towards each other kind feelings.

89. உண்ட சோற்றுக் கிரண்டகம் பண்ணப்படாது.

One ought not to be ungrateful to his benefactor.

90. உண்டார் மேனி கண்டால் தெரியும்.

A person's diet may be known by his appearance

91. உண்டாய போழ்தினுடைந்துழிக் காகம்போல் தொண்டாயிரவர் தொகுபவே. (நாலடியார் )

Thousands crowd about the wealthy as crows about a corpse *Naladiyar.*

92. "ஊணற்ற போதே யுறவற்றது"

Without entertainment friendship ceases.

93. ..............................There is no art
To find the mind's construction in the face. *(Shakespeare.)*

மனத் தோற்றத்தை முகத்தில் காண்பதற்கு ஒருவித வித்தையும் தேவையில்லை (அகத்தின் அழகு முகத்தில் தெரியும். (ஷேக்ஸ்பியர்.)

94. Neither a borrower nor a lender be,
For loan oft loses both itself and friend ; *(Shakespeare.)*

நீ கடனாளியாயு மிராதே கடன் கொடுப்போனுமாயு மிராதே
ஏனெனில் கடன் பணம் தொலைந்து போவதோடு சிநேகத்தையும் பிரியச் செய்கிறது. (ஷேக்ஸ்பியர்.)

95. Doubt thou the stars are fire ;
Doubt that the sun doth move ;
Doubt truth to be a liar
But never doubt I love. *(Shakespeare.)*

நக்ஷத்திரங்கள் நெருப்பென்பதை நீ சந்தேகிக்கிறாய்; சூரியன் தன்னைத்தானே சுற்றுகிறது என்பதையும் நீ சந்தேகிக்கிறாய்; நீ உண்மையை பொய் என்று சந்தேகிக்கிறாய்; ஆனால் நானோ எதை நேசிக்கிறேனோ அதை சந்தேகிப்பதில்லை. (ஷேக்ஸ்பியர்.)






## கிருஷ்ணலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(334-ம் பக்கத் தொடர்ச்சி.)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

**இன்ஸ்பெக்டர்** :—நான் அவ்வாறு செய்யக்கூடும். இப்போது என்னலாக வேண்டிய தென்ன ?

**ஆனந்தலிங்** :—உலககாதம் பிள்ளையிடம் கிருஷ்ணலிங் இறந்துபோன தாகவும் தாங்கள் அவர் கேஸைக் கண்டுபிடிக்க வேறொரு துப்பறிய வரை அமர்த்தியிருப்பதாகவும் கூறிவிடுங்கள். வேறொருவரை யமர்த்தி யிருப்பதாய் ஒருவர்க்கும் கூறவேண்டா மென்றும், அவருடைய புத்திரி கட்டாயம் கண்டு பிடிக்கப்படுவா ளென்றும் கூறுங்கள்.

**இன்ஸ்**:—ஆகா அப்படியே செய்கிறேன். இப்போது நீ கிருஷ்ணலிங்கின் புத்திரனே யென்பதற்கும், அவனைக் கொன்றவனல்லவென்பதற்கும் ஒரு அத்தாக்ஷி காட்டு பார்ப்போம்.

இன்ஸ்பெக்டருக்கு உண்மையில் அவன் கிருஷ்ணலிங்கின் புத்திர னென்பதில் சற்றுமே அய்யமில்லை. ஏனெனில் தந்தையின் முகஜாடை யவ னிடம் பூரணமாயிருந்தது. ஆயினும் தான் முன்பின் காணாத ஒருவனுடைய வார்த்தைகளைக் கொஞ்சம் அத்தாக்ஷியோடாவதுதான் நம்பவேண்டும் என்ற எச்சரிக்கைக்காகவே அப்படிக் கேட்டார்.

ஆனந்தலிங்கிடம் நல்ல அதிஷ்டவசமாய் அச்சமயம் கையில் முதல்தர மான அத்தாட்சியேயிருந்ததால் உடனே அதைக் காட்டவே இன்ஸ்பெக்டர் பூரணதிருப்தியடைந்து "இன்னும் என்னால் என்ன ஆகவேண்டியது?" என்றார்.

**ஆனந்**:—"இப்போது இன்னும் ஒன்றும் வேண்டாம். சமயம் நேரிடும் போது கட்டாயம் வருவேன்" என்றான்.

**இன்ஸ்**:—சரி, கொலையைக் கண்டுபிடிக்க இரவு யாரையேனும் அனுப்பு கிறேன்.

**ஆனந்**:—காலைவரையில் பொறுத்தால் சற்றும் சந்தேகம் ஏற்படாது.

**இன்ஸ்**:—"சரி, அப்படியே செய்கிறேன். இனி போய் வருகிறாயோ! கடவுள் உனக்குப் பூரணஜெயமளிப்பார்" என்றார்.

ஆனந்தலிங் விடைபெற்றுச் சென்றான். இன்ஸ்பெக்டர் இவ்வளவு வாலிபவயதில் சொல்பநேரத்தில் அல்ப அத்தாட்சிகளைக்கொண்டு ஒரு கொலை நடந்த பூரணசரித்திரத்தையும் கண்டுபிடித்துவிட்ட இவன் சாமார்த் தியம் மிக்க அபூர்வமானதென்று தனக்குள் ஆச்சரியப்பட்டுக்கொண்டார்.

இன்ஸ்பெக்டரைவிட்டுப் புறப்பட்டதே ஆனந்தலிங் பலவிதக் கம்பளி கள் எண்ணெய்ச் சீலைகள் முதலியவை விற்கும் ஒரு கடைக்குச் சென்று, அங்கு பலவிதக் கம்பளிகள் எண்ணெய்ச்சீலைகளிலும் மாதிரித்துண்டுகள்

வாங்கிக்கொண்டு துரிதமாய்க் கள்ளர் வசிக்கும் வீட்டைநோக்கிச் சென்றான். வழியில் தன் உடைகளை மாற்றி மாறுவேட மணிந்துகொண்டான்.

அவன் கொஞ்சகாலமே அங்குள்ள மூன்று வீடுகளைக் கண்டபோதிலும் அவற்றின் சுற்றுப்பக்கங்களிலுள்ள இடங்களையெல்லாம் நன்றாய் அறிந்து கொண்டான்.

அவ்வீடுகளுக்கு எதிரில் ஒரு பீர்கடை யிருந்தது. ஆனந்தஸிங் அங்கு சென்று ஒரு ஆசனத்தில் உட்கார்ந்தான். அச்சமையம் அங்கு அதிக ஆட்க ளில்லை. ஒருவன் பீர்பானம் செய்துக்கொண்டிருந்தான். இன்னொருவன் முன்னும் பின்னுமாய் அங்கு உலவிக்கொண்டிருந்தான்.

ஆனந்தஸிங் உலவிக்கொண்டிருப்பவனே அங்கு முதலாளியா யிருக்க வேண்டுமென்று உணர்ந்துகொண்டு சற்றும் தடுமாற்றமேனும் கூச்சமேனு மின்றி பழகிய சிநேகன்போல், "வந்தனம் நண்பரே! வாரும் என்னோடு ஒருகிண்ணம் பீர் அருந்தும்—இன்று என் அதிஷ்டம் எப்படி யிருக்கிறது பார்க்கப்போகிறேன். யாரோடாவது சம்பாஷித்தால்தான் மனதிற்குத் திருப்தியாயிருக்கும்" என்று கூறி விக்கிரையம் செய்பவனை நோக்கி "இரண்டு பேர்க்கும் பீரும் சிற்றுண்டியும் கொண்டுவா" வென்றான்.

ஆனந்தஸிங் நினைத்தபடி அவன் முதலில் பேசிய மனிதன் கடைக்கு முதலாளியே. ஆனந்தஸிங் அவ்வாறு பேசியதால் மிக்க சந்தோஷமடைந்து புன்சிரிப்போடு ஆனந்தஸிங் உட்கார்ந்திருக்கும் மேஜையின் எதிர்ப்பக்கத்தி லிருந்த ஆசனத்தில் சென்று உட்கார்ந்து,

"நீ என்ன சாமான்கள் விற்கிறாய்?" என்றான்.

**ஆனந்:**—"நான் இப்போது கம்பளிகள் எண்ணெய்ச் சீலைகள் இவற்றில் பேரம் செய்கிறேன். முன்தரம் வந்திருந்தபோது ஜமக்காளங்கள் கொண்டுவந்திருந்தேன் நினைப்பிருக்கிறதல்லவா?" என்றான்.

கடைக்காரன் இவனை இதற்குமுன் எப்போதும் கண்டதே யில்லை யெனினும் நன்றாய்க் கவனமிருப்பவனைப்போல் தலையசைத்தான்.

ஆனந்தஸிங் தன்னிடத்தி லிருந்த மாதிரித் துண்டுகளைக் காட்டி விலை கூறிக்கொண்டே "எதிரிலுள்ள வீடுகளில் யாரிருக்கிறார்கள்? நாளைக்கு வந்து அவர்களைக் காணவேண்டும். எண்ணெய்ச்சீலைகள் அவர்களுக்கு வேண் டியதாயிருக்கும்." என்றான்.

கடைக்காரன் தலையசைத்து சந்தேகச்குறியாய் வாயை யசைத்து, "ஆயத்தமாய் அலங்காரம் செய்யப்பட்டிருந்த வீட்டை இப்போதே வாட கைக்கு எடுத்துக்கொண்டார்கள்." என்றான்.

**ஆனந்:**—வீடு யாருடையது?

**கடைக்காரன்:**—சொந்தக்காரன் யாரென்று தெரியாது. மொத்த குத்த கைக்காரி யொருத்தி யிருக்கிறாள். அவள்தான் மொத்த வாடகை கட்டிவிடுகிறாள்.

**ஆனந்:**—அப்படியா! அப்படியானால் அவளைப் பக்குவம் செய்துகொள்ள வேண்டும். அவள் பெயரென்ன?

**கடைக்:**—வேதம்மாள்.

ஆனந்தஸிங் வேடிக்கையாய் கடைக்காரனை அக்குளில் சீண்டி அந்த நடுவீட்டில் ஒரு அழகிய குட்டியிருக்கிறாளல்லவா? அவள் யார்?" என்றான்.

# மதிப்புரை.

**ராமதாஸ் அல்லது ஸ்ரீஜ பக்தன்:—** இது புதுக்கோட்டை ஸ்ரீமான் K. S. சிதம்பர பாகவதர் அவர்களால் ஆக்கப்பட்டது. பலதிறப்பட்ட இசைப் பாக்களும் வசனமும் பொருந்தியது. கதா காலக்ஷேபம் செய்வோருக்கு உபயோகமுள்ளதாயிருக்கும். விலை அணு 12.

கிடைக்கு மிடம்:—

K. S. Chidambara
Bhagavather,
*East 3rd Street,*
*Pudukotah.*

***

**காலக்ஷேபம் என்ற வியாஸம்:-** அகரமாங்குடி மஹா கதக கண்டீரவ பிரமஸ்ரீ, T. S. சிதம்பர பாகவதர் அவர்களால் 1927ஞ சென்னை காங்கிரஸ் நகரில் கூடின அகில இந்திய ஸங்கீத மஹா நாட்டிற்கு எழுதி அனுப்பப்பெற்றது. விலை தெரியவில்லை. திருச்சிராப்பள்ளி ஜெகம் & கோ டாட்ஸன் பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

***

**சிவக்ஷேத்திர சிவநாமக் கலி வெண்பா:—** இந்நூல் ஸ்ரீ உமாபதி சிவாசாரியர் அவர்களால் அருளப்பட்டது. இது சைவ சமயாசரியர் நால்வராலும் பாராட்டிப் போற்றப்பெற்ற ஸ்தல நாமங்களையும் அந்த ஸ்தலங்களில் எழுந்தருளியிருக்கும் பெருமான் பிராட்டி திருநாமங்களையும் இனிமையாகக் கூறுகின்றது. மாயவரம், பல்லவராயப்பட்டு M. சோமசுந்தரம் பிள்ளை யவர்களால் அரும்பத உரையுடன் வெளியிடப்பட்டது. விலை அணு 4.

**மாப்பிள்ளை மருமகளாதல்:—** இந்நூல், சுமார் 1000 வருடங்களுக்கு முன் காசி நகரத்தில் மகா வித்வான்களாகக் கீர்த்தி பெற்று காம சூத்திரமென்னும் கொக்கோக சாஸ்திரத்திற்கு விருத்தியுரை செய்த எழுவர் சரித்திரத்தை விநோதமாக வருணித்துக் கூறுவது. எளிய நடை. நல்ல கற்பனை. ஆக்கியோர் கதாரத்னுகர செ. கிருஷ்ணசாமி சர்மா. இதன் விலை ரூ. 1—0—0.

கிடைக்கு மிடம்:—

**விநோத கதா மண்டலி,**
**பாரத்வாஜ நிலயம்,**
கிருஷ்ணபுரம், கோடம்பாக்கம்,
செங்கற்பட்டு.

***

**வாத வைத்திய நூல்கள்:—** யூகிமுனி கரிசலை-36, தேரையர் கரிசலை-300, அகஸ்தியர் கல்நண்டு சூத்திரம்-16 ஆகிய இம்மூன்று நூல்களும் ஒரே கட்டடமாக அணு பன்னிரண்டிற்குக் கிடைக்கும்.

யூகிமுனி வாதாங்க தீக்ஷை விதி-300, யூகிமுனி வாதவைத்திய விளக்கம்-200, யூகிமுனி மதி வெண்பா-100 ஆகிய இம்மூன்று நூல்களும் ஒரே கட்டடமாக ஒரு ரூபாய்க்குக் கிடைக்கும்.

இவ்விரண்டு புத்தகங்களும் உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் பிழையறப் பரிசோதிக்கப் பெற்று, சென்னை, கோமளேசுவரன் பேட்டை, அம்மா விலாச புத்தகசாலை, ம. ஷண்முக முதலியாரால் அச்சிடப்பட்டு வெளியாக்கப்பட்டிருக்கின்றன.

(இப்புத்தகங்கள் யாவும் எம்மிடமும் கிடைக்கும்)



# வர்த்தமானப்பகுதி

**சென்னையிற் செய்த ஆகாய விமானம் :**—சென்னை பீப்பிள்ஸ் பார்க் கண்காட்சியில் ஸ்ரீராம் மோட்டார் தொழிற்சாலையார் செய்த ஆகாய விமானத்தை வைத்திருந்தார்கள். சென்னையில் ஆகாய விமானம் செய்தது இதுவே முதல்தடவையாகும்.

* * *

**அரசர் பிரானின் உடல் நிலை :**—நமது ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தியார் பிணிவாய்ப்பட்டிருக்கிறார். அவரது தேசநிலைமை சிலநாட்களாகக் கவலைக் கிடமாவதும் மாறுவதுமாக இருந்து வருகிறது. பின்னர் வந்த செய்திகளால் சிறிது சிறிதாக நலம் பெற்று வருவதாகத் தெரிகிறது. அரசர் பிரானது தேகத்தில் புதிய ரத்தத்தைச் செலுத்தவேண்டுமென்று டாக்டர்கள் கருதினார்கள். பலர் தங்கள் ரத்தத்தைக் கொடுப்பதாக முன்வந்திருக்கிறார்கள்.

* * *

**மின்சார இரும்பு பெட்டி:**—திருடர்கள் எத்தகைய இரும்புப் பெட்டிப் பூட்டையும் தங்கள் யுக்தியாலும் சாமர்த்தியத்தாலும் திறந்துவிடுகிறார்கள். ஆதலால் மின்சாரம் வைத்த நூதன இரும்புப்பெட்டி யொன்றை இப்பொழுது கண்டுபிடித்திருக்கிறார்களாம். இரவில் திருடன் சமீபத்தில் சென்றால் "திருடன்! திருடன்!! போலிஸ்! போலீஸ்!! என்று அது சப்தம்போட ஆரம்பித்துவிடுகிறதாம். திருடர்கள் இதன் ரகஸியத்தைக் கண்டு அடக்குகிறவரை இது பத்திரமானதே.

**ரத்தம் சிந்தாமல் யுத்தம் செய்யும் வழி:**—எதிர் காலத்துச் சண்டைகளை துப்பாக்கி குண்டு முதலியவைகளில்லாமல் க்ளோரோபாரம் என்னும் மயக்க மருந்தைக்கொண்டே நடத்திவிடலா மென்று டாக்டர் குஸ்டவ் எக்லாப் (Dr. Gustav Egloff) அவர்கள் கூறுகிறார்கள். ஆயிரம் ஆகாய விமானங்களில் விமானம் ஒன்றுக்கு 5000 பவுண்டு க்ளோரோபாரம் (Chloroform) கொண்டுபோனால் ந்யூயார்க் சிகாகோ முதலிய பெரிய நகரங்களையுங் கூட தூங்க வைத்துவிடலாமாம். இரத்தம் சிந்தாது சண்டை செய்ய இது நல்ல வழியாம்.

**உலகத்தின் உன்னத மலை :**—ஹிமோத் பர்வதத்தின் உன்னத சிகரத்தை கர்னல் எவரெஸ்ட் என்பவரே முதலில் கண்டுபிடித்ததாயும் அதனால் அவருடைய பெயரே அதற்கு இடப்பட்டு மவுண்ட் எவரஸ்ட் என்னும் பெயருடன் விளங்குகிறதாகக் கருதப்படுகிறது. ஆனால் உண்மையில் நம் இந்தியர்களுக்கு அதற்கு முன்பே அச்சிகரம் தெரியும். கௌரிசங்கர் என்னும் பெயருடன் அதை வெகுகாலத்திற்கு முன்பே கொண்டாடி வந்திருக்கிறார்கள். ஜெர்மன் தேசத்தார்கள் தங்கள் பூகோளப் படங்களில், தம் தேசத்தாராகிய ஹார்மன் ஸ்சாலா ஜென்ட்விட், மவுண்ட் எவரெஸ்டும் கௌரிசங்கர் என்னும் சிகரமும் ஒன்றேதான் என்று ஆராய்ச்சியால் கண்டறிந்தமைகொண்டு நம் இந்தியர்களுக்கு கௌரவம் கொடுக்க எண்ணி அவற்றில் கௌரிசங்கர் என்னும் பெயரையே அளித்திருக்கிறார்கள்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

**விபவ௵ மாசி௴—கலியுகாதி 5030, சாலிவாகனம் 1851,**
**பசலி 1338—கொல்லமாண்டு 1104—ஹிஜரி 1347,**
**இங்கிலீஷ் 1929௵—பிப்ரவரி௴—மார்ச்சு௴**

| மாசி௴ | பிப்ரவரி. | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 12 | செவ் | திரி41-50 | பூர26-10 | ம26-10அ | விஷ்ணுபதி புண்யகாலம், மந்திரம் ஜெபிக்க |
| 2 | 13 | புத | சது40-3 | உத்26-5 | சி26-5ம | மாச சதுர்த்தி விரதம், கணேச ஜயந்தி [சமி |
| 3 | 14 | வியா | பஞ்37-30 | ரே25-18 | சி25-18அ | மதன பஞ்சமி, வசந்தபஞ் |
| 4 | 15 | வெ | சஷ்34-18 | அஸ்23-50 | அ23-50சி | சஷ்டி, உபநயனம் |
| 5 | 16 | சனி | சப்30-28 | ப⁂21-43 | சி21-43அ | **கிருத்திகை**, ரதசப்தமி |
| 6 | 17 | ஞா | அஷ்25-50 | கிரு18-58 | சித்60 | பீஷ்ம தர்ப்பணம் |
| 7 | 18 | திங் | நவ20-38 | ரோ15-35 | அமி60 | தானியம் செலவிட |
| 8 | 19 | செவ் | தச14-53 | மிரு11-38 | சி11-38ம | மீனயனம் நாழிகை 4-50 |
| 9 | 20 | புத | ஏகா8-43 | திரு7-18 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 10 | 21 | வியா | துவா2-23<br>திர56-0 | புன2-43<br>பூச58-8 | அமி60 | பிரதோஷம், அவமாகம் |
| 11 | 22 | வெ | சது50-10 | ஆயி54-0 | மர60 | |
| 12 | 23 | சனி | ○44-55 | மக50-43 | அ50-43சி | |
| 13 | 24 | ஞா | பிர40-53 | பூர48-30 | சி48-30அ | |
| 14 | 25 | திங் | துதி38-20 | உத்47-53 | சித்60 | |
| 15 | 26 | செவ் | திரி37-30 | அஸ்48-55 | சித்60 | |
| 16 | 27 | புத | சது38-38 | சித்51-50 | சித்60 | |
| 17 | 28 | வியா | பஞ்41-40 | சுவா54-5 | அ54-5சித் | |
| 18 | மார்ச்சு௴ 1 | வெ | சஷ்16-15 | விசா60 | சித்60 | |
| 19 | 2 | சனி | சப்52-18 | விசா2-53 | சித்60 | |
| 20 | 3 | ஞா | அஷ்58-48 | அனு10-13 | மர60 | திஸ்ரேஷ்டகா |
| 21 | 4 | திங் | நவ60 | கே17-58 | சித்60 | இராமதாஸ நவமி [செய்ய |
| 22 | 5 | செவ் | நவ5-20 | மூல25-33 | அ25-33சி | கிருஷியாரம்பம், உழவு |
| 23 | 6 | புத | தச10-48 | பூரா32-18 | அமி60 | கணிதாரம்பம் |
| 24 | 7 | வியா | ஏகா15-53 | உத்37-43 | சித்60 | சர்வ மதவ ஏகாதசி [தசி |
| 25 | 8 | வெ | துவ18-58 | திரு41-40 | ம41-40சி | பிரதோஷம், விஜய துவா |
| 26 | 9 | சனி | திர20-35 | அவி44-10 | சி44-10அ | **மஹா சிவராத்திரி** |
| 27 | 10 | ஞா | ச●20-35 | ச45-10 | சித்60 | **சர்வத்திர அமாவாசை** |
| 28 | 11 | திங் | அ19-20 | பூர44-58 | ம44-58சி | சோமவார அமாவாசை |
| 29 | 12 | செவ் | பிர16-4 5 | உத்43-40 | அ43-40சி | பால்குண சுத்தம் |
| 30 | 13 | புத | துதி13-15 | ரே41-35 | மர60 | மீனரவி நாழிகை 45-57, அவமாகம் |

| | | | |
|---|---|---|---|
| சுக் | குரு | செவ் ராகு | |
| சூரி | 2-மிது-செ<br>15-மே-சுக்<br>27-கும்-புத | | — |
| — புத | | | |
| சனி | கே | | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.